# 108 உபநிஷத்ஸாரம்

॥ १०८ उपनिषत्सारः ॥



ப்ரம்ம-கைவல்ய-ஜாபால-
ச்வேதாச்வதர- ஹம்ஸ-
ஆருணி-கர்ப்ப-நாராயண
உபநிஷதங்கள்

உரையாசிரியர்
“அண்ணா”

# 108 உபநிஷத்ஸாரம்

# ॥ १०८ उपनिषत्सारः ॥

ப்ரம்ம-கைவல்ய-ஜாபால-ச்வேதாச்வதர-
ஹம்ஸ-ஆருணி-கர்ப்ப-நாராயண
உபநிஷதங்கள்

உரையாசிரியர்
''அண்ணா''




ஸ்ரீராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் :: சென்னை 600 004

# முன்னுரை

முக்திகோப நிஷத்தில் ஸ்ரீராமர் ஆஞ்ஜநேயருக்கு உபதேசித்ததாக நூற்றெட்டு உபநிஷதங்கள் கூறப்படுகின்றன.

அவற்றுள் முக்கியமான ஈச, கேன, கட, ப்ரச்ன, முண்டக, மாண்டூக்ய, ஐதரேய, தைத்திரீய, சாந்தோக்ய, பிருஹதாரண்யக என்ற முதல் பத்து உபநிஷதங்களும் ஏற்கெனவே ஸ்ரீராமகிருஷ்ண மடத்தின் வாயிலாகத் தமிழ் உரையுடன் வெளியிடப் பட்டிருக்கின்றன.

இப்பொழுது மீதியுள்ளவற்றில் பிரம்ம, கைவல்ய, ஜாபால, ச்வேதாச்வதர, ஹம்ஸ, ஆருணி, கர்ப்ப, நாரராயண என்று அடுத்து வரும் எட்டு உபநிஷதங்கள் இந்த வெளியீட்டில் அடக்கம்.

ஸ்ரீராமகிருஷ்ண மாணவரில்லம்
சென்னை 600 004
ஆவணியவிட்டம்
16.8.89

உரையாசிரியர்
அண்ணா'

# பொருளடக்கம்

முக்திகோப நிஷத்துக் கூறும் வரிசைக் கிரமத்தில் இந்தப் புத்தகத்தில் அடங்கிய உப நிஷதங்கள்.

பக்கம்

# ॥ १०८ उपनिषत्सारः ॥

## ॥ ११ ब्रह्मोपनिषत् ॥

ओं सहनाववतु । सह नौ भुनक्तु । सह वीर्यं करवावहै । तेजस्विनावधीतमस्तु । मा विद्विषावहै । ओं शान्तिः शान्तिः शान्तिः ॥

अथास्य पुरुषस्य चत्वारि स्थानानि भवन्ति नाभिर्हृदयं कण्ठं मूर्धा च । तत्र चतुष्पादं ब्रह्म विभाति जागरिते ब्रह्मा स्वप्ने विष्णुः सुषुप्तौ रुद्रस्तुरीयमक्षरम् । स आदित्यो विष्णुश्चेश्वरश्च स्वयममनस्क-मश्रोत्रमपाणिपादं ज्योतिर्विदितम् ॥

यत्र लोका न लोका देवा न देवा यज्ञा न यज्ञा माता न माता पिता न पिता स्नुषा न स्नुषा चाण्डालो न चाण्डालः पौल्कसो न पौल्कसः श्रमणो न श्रमणः तापसो न तापस एकमेव तत् परब्रह्म विभाति निर्वाणम् ॥ २ ॥

न तत्र देवा ऋषयः पितर ईशते प्रतिबुद्धः सर्वविदिति ॥ ३ ॥

## ॥ 108 உபநிஷத்ஸார: ॥

## ॥ 11. ப்ரஹ்மோபநிஷத் ॥

ஓம் ஸஹநாவது ।
ஸஹநௌ புநக்து । ஸஹவீர்யம் கர்வாவஹை ।
தேஜஸ்விநாவதீதமஸ்து ।
மா வித்விஷாவஹை । ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ॥

அதாஸ்ய புருஷஸ்ய சத்வாரி ஸ்த்தாநனி பவந்தி நாபிர்ஹ்ருதயம் கண்டம்மூர்த்தா ச । தத்ர சதுஷ்பாதம் ப்ரஹ்ம விபாதி ஜாகரிதே ப்ரஹ்மா ஸ்வப்னே விஷ்ணு: ஸுஷுப்தௌருத்ரஸ் துரீய -மக்ஷரம் । ஸ ஆதித்யோ விஷ்ணுச் சேச்வரச்ச ஸ்வய-மமனஸ்க-மச்ரோத்ர-மபாணி பாதம் ஜ்யோதிர்-விதிதம் ॥

யத்ர லோகா நலோகா தேவா ந தேவா யஜ்ஞா ந யஜ்ஞா மாதா ந மாதா பிதா ந பிதா ஸ்நுஷா ந ஸ்நுஷா சாண்டாலோ ந சாண்டால: பௌல்கஸோ ந பௌல்கஸ: ச்ரமணோ ந ச்ரமண: தாபஸோ ந தாபஸ ஏகமேவதத் பரப்ரஹ்ம விபாதி நிர்வாணம் ॥2॥

ந தத்ர தேவா ருஷய: பிதர ஈசதே ப்ரதிபுத்த: ஸர்வவிதிதி ॥3॥

---

## 11. பிரம்மோபநிஷத்து

ஓம் (குருசிஷ்யர்களாகிய) எங்களை இருவரையும் சேர்த்து (பிரம்மம்) காப்பாற்றட்டும். எங்களை இரு

வரையும் சேர்த்துப் போஷிக்கட்டும். நாங்கள் இரு வரும் சேர்ந்து வீரியத்துடன் உழைப்போமாக. எங்கள் அத்தியயனம் கூர்மையுள்ளதாகவும் பிரகாசமுள்ள தாகவும் ஆக வேண்டும். (ஒருபோதும் நாங்கள் ஒரு வரையொருவர்) துவேஷிக்காமலிருக்க வேண்டும்.
ஓம் முவ்வகையிலும் சாந்தி நிலவுக।

1. (உடலில் உறையும்) ,இந்த புருஷனுக்கு (முக்கியமான) இடங்கள் நான்கு ஆகும் — தொப்பூழ், இருதயம், கழுத்து, உச்சி என்று. இவற்றில் நான்கு பாதங்களை உடைய பிரம்மம் பிரகாசிக்கிறது — விழிப்பில் பிரம்மா, கனவில் விஷ்ணு, உறக்கத்தில் ருத்ரன், (அதற்கப்பால் நாலாவது) துரியத்தில் அக்ஷரப்ரஹ்மம். அந்தப் பரமபுருஷனே சூரியனும், எங்கும் வியாபித்த விஷ்ணுவும், உலகையாளும் ஈசுவரனும். அவன் மனதில்லாமல் (நினைப்பவனாகவும்) காதில்லாமல் (கேட்ப வனாகவும்) கை கால்களில்லாமல் (செயல்புரிபவனாகவும்) சுயஞ்ஜோதி ஸ்வரூபமாக உள்ளவன் என்று ஒப்புக் கொள்ளப் பட்டவன்.

2. எங்கு உலகம் உலகமா யில்லையோ, தேவர்கள் தேவர்களாக இல்லையோ, யக்ஞங்கள் யக்ஞங்களாக இல்லையோ, தாய் தாயாக இல்லையோ, தந்தை தந் தையாயில்லையோ, மருமகள் மருமகளாக இல்லையோ, சண்டாளன் சண்டாளனாக இல்லையோ, பிரதிலோம ஜாதியான பௌல்கஸன் பௌல்கஸனாக இல்லையோ, துறவி துறவியாக இல்லையோ, தவசி தவசியாக இல்லையோ, எல்லாம் ஒன்றேயான பரப் பிரம்மமாக விளங்குகிறதோ அது நிர்வாணம் என்ற நிலை.

3. அங்கு தேவர்களோ ருஷிகளோ பிதிருக்களோ இல்லை. (உலகங்களிலிருந்து) விழித்துக் கொண்ட ஞானி வல்லமையுடன் அங்கு விளங்குகிறான். அவன் எல்லாமறிந்தவன்.

हृदिस्था देवताः सर्वा हृदि प्राणाः प्रतिष्ठिताः ।
हृदि प्राणश्च ज्योतिश्च त्रिवृत् सूत्रं च तद्विदुः।
चैतन्ये तिष्ठति ॥ ४ ॥

यज्ञोपवीतं परमं पवित्रं प्रजापतेर्यत्सहजं पुरस्तात् ।
आयुष्यमग्र्यं प्रतिमुंच शुभ्रं यज्ञोपवीतं बलमस्तु तेजः
॥ ५ ॥

सशिखं वपनं कृत्वा बहिः सूत्रं त्यजेद्बुधः ।
यदक्षरं परं ब्रह्म तत्सूत्रमिति धारयेत् ॥ ६ ॥

सूचनात्सूत्रमित्याहुः सूत्र नाम परं पदम् ।
तत्सूत्रं विदितं येन स विप्रो वेदपारगः ॥ ७ ॥

---

4. எல்லா தேவதைகளும் இருதயத்தில் இருக்கிறார்கள். பிராணன்கள் இருதயத்தில் நிலைபெறுகின்றன. இருதயத்தில் தான் உயிர்நிலையும் ஞான ஒளியும். அதுதான் முப்புரிப்பூணூல் என்று ஞானிகள் அறிகிறார்கள். பரமாத்மா இருதயத்தில் தெய்வமாகவும் பிராணனாகவும் அறிவாகவும் உறைகிறது.

5. பரிசுத்தியளிக்கக் கூடியவற்றுள் சிறந்ததும், ஆதியில் பிரம்மா தோன்றும்போதே அவருடன் தோன்றியதும், ஆயுளையும் முதன்மையையும் அளிக்கவல்லதுமாகிய வெண்மையான பூணூலை தரிக்கிறேன். ஞானஒளியும் பலமும் அதனால் நிலைபெறவேண்டும்.

(இது யக்ஞோபவீதம் புதிதாகத்தரிக்கும்போது உச்சரிக்க் வேண்டிய மந்திரம்.)

ஹ்ருதிஸ்த்தா தேவதா : ஸர்வா ஹ்ருதி ப்ராணு : ப்ரதிஷ்ட்டிதா: ।ஹ்ருதி ப்ராணச்ச ஜ்யோதிச்ச த்ரிவ்ருத் ஸூத்ரஞ்ச தத்விது : ॥ சைதன்யே திஷ்ட்டதி ॥ 4 ॥

யஜ்ஞோபவீதம் பரமம் பவித்ரம் ப்ரஜாபதேர் யத் ஸஹஜம் புரஸ்தாத் । ஆயுஷ்ய - மக்ர்யம் ப்ரதிமுஞ்ச சுப்ப்ரம் யஜ்ஞோபவீதம் பலமஸ்து தேஜ: ॥ 5 ॥

ஸசிகம் வபநம் க்ருத்வா பஹி : ஸூத்ரம் த்யஜேத்புத :। யதக்ஷரம் பரம் ப்ரஹ்ம தத்ஸூத்ரமிதி தாரயேத் ॥ 6 ॥

ஸூசனுத் ஸூத்ர - மித்யாஹு: ஸூத்ர நாம பரம்பதம் । தத்ஸூத்ரம் விதிதம் யேந ஸ விப்ரோ வேதபாரக ॥ 7 ॥

---

6. குடுமியுடன் தலைமயிரை மழித்து வெளிப்பூணூலை ஞானி விலக்கிவிடவேண்டும். எது அழியாத பரப் பிரம்மமோ அதை ஸூத்ர மெனப்பட்ட பூணூலாகத் தரிக்கவேண்டும்.

(நூலில் மணிகள் கோக்கப்பட்டாற்போல் பிரம்மத் திடம் உலகனைத்தும் கோக்கப்பட்டிருப்பதால் பிரம்மம் ஸூத்ராத்மா எனப்படும். 'மயி ஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணு இவ' என்பது கீதை 7.7)

7. ஸூசனே செய்வதால் அதாவது சுட்டிக் காட்டு வதால் அதை ஸூத்ரம் என்று கூறுகின்றனர். ஸூத்ரம் குறிப்பிடுவது (ஒப்புயர்வற்ற) பரமபதம். அந்த ஸூத் ரம் எவனுல் அறியப்பட்டதோ அவனே வேதத்தின் கரை கண்ட பிராம்மணனுவான்.

येन सर्वमिदं प्रोतं सूत्रे मणिगणा इव ।
तत्सूत्रं धारयेद्योगी योगवित् तत्वदर्शिवान् ॥ ८ ॥

बहिः सूत्रं त्यजेद्विद्वान् योगमुत्तम-मास्थितः ।
ब्रह्मभावमिदं सूत्रं धारयेद्यः स चेतनः ॥ ९ ॥

धारणात्तस्य सूत्रस्य नोच्छिष्टो नाशुचिर्भवेत् ।
सूत्रमन्तर्गतं येषां ज्ञानयज्ञोपवीतिनाम् ।
ते वै सूत्रविदो लोके ते यज्ञोपवीतिनः ॥ १० ॥

ज्ञानशिखिनो ज्ञाननिष्ठा ज्ञानयज्ञोपवीतिनः ।
ज्ञानमेव परं तेषां पवित्रं ज्ञानमुच्यते ॥ ११ ॥

---

8. சரட்டில் மணிநிறைகள் போல் இவ்வனைத்தும் எதில் கோக்கப்பட்டுள்ளதோ அந்தச்சரட்டை (ஸூத்திரத்தை) யோகத்தை அறிந்தவனும் உண்மையைக்கண்டவனுமான யோகி தரித்து கொள்ளட்டும்.

9. சிறந்தயோகத்தில் நிலைபெற்ற ஞானியானவன் வெளிப்படையான பூணூலை விட்டுவிடட்டும். பிரம்ம பாவனையாகிற இந்த ஸூத்திரத்தை (நூலை) எவன் த்ரிக்கிருனோ அவன் தான் அறிவாளி.

ஒப்பிடுக. —

நூலுஞ்சிகையு நுவலிற் பிரம்மமோ
நூலது காற்பாச நுண்சிகை கேசமா
நூலது வேதாந்த நுண்சிகை ஞானமா
நூலுடையந்தணர் காண நுவலிலே

— திருமந்திரம்

யேந ஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணா
இவ । தத்ஸூத்ரம் தாரயேத் யோகீ யோகவித்
தத்வதர்சிவான் ॥ 8 ॥

பஹி: ஸூத்ரம் த்யஜேத் வித்வான்
யோகமுத்தம-மாஸ்த்தித: । ப்ரஹ்மபாவ-மிதம்
ஸூத்ரம் தாரயேத் ய: ஸ சேதன: ॥ 9 ॥

தாரணாத்தஸ்ய ஸூத்ரஸ்ய நோச்சிஷ்டோ
நாசுசிர்ப்பவேத் । ஸூத்ரமந்தர்க்கதம் யேஷாம்
ஜ்ஞானயஜ்ஞோபவீதினாம் । தே வை
ஸூத்ரவிதோ லோகே
தே யஜ்ஞோபவீதின : ॥ 10 ॥

ஜ்ஞானசிகினோ ஜ்ஞான-நிஷ்ட்டா
ஜ்ஞானயஜ்ஞோபவீதின: । ஜ்ஞான-மேவ பரம்
தேஷாம் பவித்ரம் ஜ்ஞான-முச்யதே ॥ 11 ॥

---

10. அந்த ஸூத்ரத்தை அணிந்தால் அது எச்சிலாகவோ அசுத்தமாகவோ போகாது. ஞானப்பூணூலணிந்த எவர்களுடைய ஸூத்ரம் உள்ளே போய் விட்டதோ அவர்களே உலகில் ஸூத்திரத்தின் ரகசியத்தை உணர்ந்தவர்கள். அவர்களே உலகில் உண்மையான பூணூலணிந்தவர்கள்.

11. ஞானமே சிகையாகவும், ஞானமே பூணுலாகவும் உடையவர்கள் ஞானத்தில் நிலைபெற்றவர்கள். அவர்களுக்கு ஞானத்தைவிட உயர்ந்த தொன்றுமில்லை. ஞானந்தான் புனிதத்தன்மையளிப்பதாகக்கூறப்படுகிறது.

अग्नेरिव शिखा नान्या यस्य ज्ञानमयी शिखा ।
स शिखीत्युच्यते विद्वान् नेतरे केशधारिणः ॥ १२ ॥

कर्मण्यधिकृता ये तु वैदिके ब्राह्मणादयः ।
तेभिर्धार्यमिदं सूत्रं क्रियांगं तद्धि वै स्मृतम् ॥ १३ ॥

शिखा ज्ञानमयी यस्य उपवीतं च तन्मयम् ।
ब्राह्मण्यं सकलं तस्य इति ब्रह्मविदो विदुः ॥ १४ ॥

इदं यज्ञोपवीतं तु परमं यत्परायणम् ।
स विद्वान् यज्ञोपवीती स्यात् स यज्ञस्तं यज्विनं विदुः
॥ १५ ॥

एको देवः सर्वभूतेषु गूढः सर्वव्यापी सर्वभूतान्तरात्मा ।
कर्माध्यक्षः सर्वभूताधिवासः साक्षी चेता केवलो निर्गुणश्च ॥ १६ ॥

---

12. அக்னியைப்போன்ற ஞானசிகையல்லாது மற்றது சிகையாகாது. எவனுடைய சிகை ஞானமயமானதோ அந்த அறிவாளியே சிகையுடையவனாகக் கூறப்படு வான்; கேசத்தைத் தரிக்கும் மற்றவர்களல்லர்.
13. வைதீக கர்மங்களில் அதிகாரமுடைய பிராம்மணர் முதலிய எவர்கள் உண்டோ அவர்களால் கருமத்திற்கு அங்கமாக இந்தப்பூணூல் அணியப்படவேண்டும் என் பது தான் தர்மசாஸ்திரத்தில் கூறப்பட்டதாகும்.
14. எவனுடைய சிகை ஞானமயமானதோ, பூணூலும் அப்படியே ஞானமயமானதோ அவனுக்கு பிராம் மணத்துவம் முழுதும் சித்திக்கும் (வேதம் முழுவதிற்

அக்னேரிவ சிகா நான்யா யஸ்ய ஜ்ஞானமயீ சிகா ।
ஸ சிகீத்யுச்யதே வித்வாந் நேதரே
கேசதாரிண: ॥ 12 ॥

கர்மண்யதிக்ருதா யே து வைதிகே
ப்ராஹ்மணுதய :। தேபிர்த்தார்யமிதம் ஸூத்ரம்
க்ரியாங்கம் தத்தி வை ஸ்ம்ருதம் ॥ 13 ॥

சிகா ஜ்ஞானமயீ யஸ்ய உபவீதஞ்ச தன்மயம் ।
ப்ராஹ்மண்யம் ஸகலம் தஸ்ய இதி ப்ரஹ்மவிதோ
விது : ॥ 14 ॥

இதம் யஜ்ஞோபவீதம் து பரமம் யத்பராயணம் ।
ஸ வித்வான் யஜ்ஞோபவீதீ ஸ்யாத்
ஸ யஜ்ஞஸ்-தம் யஜ்வினம் விது: ॥ 15 ॥

ஏகோ தேவ: ஸர்வபூதேஷு கூட: ஸர்வவ்யாபீ
ஸர்வபூதாந்தராத்மா । கர்மாத்த்யக்ஷ: ஸர்வபூதா
திவாஸ: ஸாக்ஷீ சேதா கேவலோ
நிர்க்குணச்ச ॥ 16 ॥

---

கும் அதிகாரம்) என்று வேதத்தை அறிந்தவர்கள் உணர்ந்தார்கள்.

15. இந்தப்பூணூலே சிறந்ததும், நாடியடையத்தக்கது மாகும். அதை அறிந்தவனே யக்ஞோபவீதமணிந்த வனுவான். அவனே யக்ஞமும் யக்ஞம் செய்பவனும் என்று அறிவாளிகள் உணர்ந்தார்கள்.

16. (ஞானமாவது) தெய்வம் ஒன்றே, அது எல்லா உயிர்களுள்ளும் மறைந்துளது எங்கும் நிறைந்தது, எல்லாப்பிராணிகளுக்கும் அந்தராத்மா, எல்லாச் செயல்களேயும் மேற்பார்வை செய்வது எல்லாப்பொ ருள்களுக்கும் அடிப்படையாய் வசிப்பது, ஸாக்ஷியா யிருப்பது, அறிவாயிருப்பது, தான்தாஞக விளங்கு வது, குணங்களேக் கடந்தது.

एको वशी सर्वभूतांन्तरात्मा एकं रूपं बहुधा यः करोति ।
तमात्मस्थं योऽनुपश्यन्ति धीरास्तेषां सुखं शाश्वतं नेतरेषाम्
॥ १७ ॥

आत्मानमरणिं कृत्वा प्रणवं चोत्तरारणिम् ।
ध्यान -निर्मथनाभ्यासाद्देवं पश्येन्निगूढवत् ॥ १८ ॥

तिलेषु तैलं दधनीव सर्पिरापः स्रोत : स्वरणीषु चाग्नि : ।
एवमात्मात्मनि जायतेऽसौ सत्येनैनं तपसा योऽनुपश्यति
॥ १९ ॥

ऊर्णनाभिर्यथा तन्तून् सृजते संहरत्यपि ।
जाग्रत्सवप्ने तथा जीवो गच्छत्यागच्छते पुनः ॥ २० ॥

---

17. எல்லா உயிர்களுக்கும் அந்தராத்மாவாகவும் அனைத்தையும் தன் வசத்தில் வைத்துக்கொண்டிருப்ப வனுகவும் உள்ள ஒருவனும், ஒரே ரூபத்தைப்பல வாகச் செய்பவனும் எவனே, அவனைத்தங்களிடமே இருப்பவனுக எந்த தீரர்கள் தொடர்ந்து காண்கிறுர் களோ அவர்களுக்கே அழியாத சுகம் உண்டு, பிறர்க் கில்லை.

18. ஆத்மாவைக்கீழ் அரணியாகவும், ப்ரணவம் எனும் ஓங்காரத்தை மேல் அரணியாகவும் செய்து கொண்டு தியானமாகிற கடைதலை அப்பியாசம் செய்து மறைந்திருந்த அக்னியை வெளிக் காண்பதுபோல் பரமாத்மாவைக் காணவேண்டும்.

ஏகோ வசீ ஸர்வபூதாந்தராத்மா ஏகம் ரூபம் பஹுதா ய : கரோதி । தமாத்மஸ்த்தம் யே஽னுபச்யந்தி தீராஸ்-தேஷாம் ஸுகம் சாச்வதம் நேதரேஷாம் ॥ 17 ॥

ஆத்மானமரணிம் க்ருத்வா ப்ரணவஞ்சோத்தராரணிம் । த்த்யான நிர்மதனுப்ப்யாஸாத் -தேவம் பச்யேந் நிகூடவத் ॥ 18 ॥

திலேஷு தைலம் ததனீவ ஸர்ப்பிராப : ஸ்ரோத : ஸ்வரணீஷு சாக்னி :। ஏவமாத்மாத்மனி ஜாயதே஽ஸௌ ஸத்யேனைனம் தபஸா யோ஽னுபச்யதி ॥ 19 ॥

ஊர்ணநாபிர் யதா தந்தூன் ஸ்ருஜதே ஸம்ஹரத்யபி । ஜாக்ரத் ஸ்வப்நே ததா ஜீவோ கச்சத்யாகச்சதே புன: ॥ 20 ॥

---

19. ஸத்தியத்தாலும் தவத்தாலும் எவன் தொடர்ந்து பார்க்கிறானோ அவனுடைய உள்ளத்தில் எள்ளில் மறைந்திருந்த எண்ணெய் போலவும், தயிரில் இருந்த வெண்ணெய் போலவும், ஆற்றில் இருந்த நீர்போல வும், அரணிக்கட்டைகளிலிருந்த நெருப்புப் போலவும் ஆத்மா வெளித்தோன்றுகிறது.

20. சிலந்திப்பூச்சி எவ்வாறு நூலை உண்டாக்கி மீண்டும் தனக்குள்ளே இழுத்துக் கொள்ளுகிறதோ அவ்வாறே ஜீவன் விழிப்பிலும் உறக்கத்திலும் (வெளிஉலகிற்கு) வருகிறான், மறுபடி திரும்பி (உள்ளே) போகிறான்.

नेत्रस्थं जागरितं विद्यात् कण्ठे स्वप्नं समाविशत् ।
सुषुप्तं हृदयस्थं तु तुरीयं मूर्ध्नि संस्थितम् ।। २१ ।।

यतो वाचो निवर्तन्ते अप्राप्य मनसा सह ।
आनन्दमेतज्जीवस्य यज्ज्ञात्वा मुच्यते बुधः ।। २२ ।।

सर्वव्यापिन-मात्मानं क्षीरे सर्पिरिवास्थितम् ।
आत्मविद्या तपो मूलं तद्ब्रह्मोपनिषत्पदं। तद्ब्रह्मोपनिषत्पद-
मिति ।। २३ ।।

---

21. (ஜீவன்) ஜாக்ரத்தில் கண்ணில் இருப்பதாகவும் ஸ்வப்னத்தில் கழுத்தில் உறைவதாகவும் ஸுஷுப்தியில் இருதயத்தில் உள்ளதாகவும் துரீயத்தில் தலை உச்சியில் நிலைபெற்றதாகவும் அறியவேண்டும்.

22. எந்த நிலையை (எட்டிப்பிடிக்க முடியாமல்) மனதுடன் கூட வாக்கும் திரும்பி விடுகிறதோ அதுதான் ஜீவனுடைய (பரிபூர்ண) ஆனந்தநிலை. அதை உணர்ந்து புத்திமான் முக்தனாகிறான்.

23. பாலில் வெண்ணெய்போல் எங்கும் வியாபித்திருக்கும் ஆத்மாவை ஞானத்தாலும் தவத்தின் மூலமாகவும் (அறிய வேண்டும்). அதுதான் பிரம்மோபநிஷத்தால் அடையவேண்டிய பதவி. அதுதான் பிரம்மோபநிஷத்தால் அடையவேண்டியபதம் எனப்பூர்த்தி.

நேத்ரஸ்த்தம் ஜாகரிதம் வித்யாத் கண்டே
ஸ்வப்னம் ஸமாவிசத் । ஸுஷுப்தம்
ஹ்ருதயஸ்த்தம் து துரீயம் மூர்த்த்னி
ஸம்ஸ்த்திதம் ॥ 21 ॥

யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மனஸா
ஸஹ । ஆனந்த -மேதஜ்ஜீவஸ்ய
யஜ் ஜ்ஞாத்வா முச்யதே புத :॥ 22 ॥

ஸர்வவ்யாபின-மாத்மானம் க்ஷீரே
ஸர்ப்பிரிவாஸ்த்திதம் ।
ஆத்ம-வித்யா தபோமூலம் தத்
ப்ரஹ்மோபநிஷத் பதம் । தத்ப்ரஹ்மோ
பநிஷத்பதமிதி ॥ 23 ॥

### உபநிஷத்தின் விஷயச்சுருக்கம்

உடலில் நான்கு இடங்களில் பரமாத்மாவை நான்கு வடிவில் — கொப்பூழில் விழிப்பு நிலையில் பிரம்மாவாகவும், இருதயத்தில் கனவு நிலையில் விஷ்ணு வாகவும், கழுத்தில் உறக்க நிலையில் ருத்ர ஞகவும், தலை உச்சியில் துரீயஸமாதியில் அக்ஷரப் பிரம்மமாகவும் — தியானிக்கவேண்டும். அந்தப்பரம புருஷன் மனதில்லாமல் நினைப்பவஞகவும், காதில்லா மல் கேட்பவஞகவும், கை கால் களில்லாமல் செயலபுரியவஞகவும், எங்கும் வியாபித்தவஞகவும் ஸ்வயஞ்ஜோதிஸ்வரூபமாகவும் உள்ளவன்.

நாலாவது நிலை நிர்வாணம் எனப்படுவது, அங்கு உலகம் உலகமாயில்லை, தேவர்கள் தேவர்களாக இல்லை, மனிதர்கள் மனிதர்களாக இல்லை, எல்லாம் ஒன்றே யான பரப்பிரம்மமாக விளங்குகிறது. உலகக் கனவி

லிருந்து விழித்துக்கொண்ட ஞானி அநநுலயில் ஸாவ வல்லமை உள்ளவஞக விளங்குகிருன்

பரமாத்மாவே தெய்வமாகவும் பிராணஞகவும் அறிவாகவும் எல்லோருடைய உள்ளத்திலும் விளங்கு கிறது. இதைக்குறிப்பிடுவதற்காகத்தான் மூன்று இழை களை உடைய பூணூல் அணியப்படுகிறது. வெளிப் படையான பூணூலை விட்டுவிட்டு பிரம்மபாவனையா கிற பூணூலை ஞானியான துறவி அணிகிருன். அந்தப் பூணூல் ஒரு பொழுதும் அசுத்தமாகப்போகாது. ஞானமே சிகையாகவும் ஞானமே பூணூலாகவும் உடை யவர்கள் சிறப்புடையவர்கள். ஞானத்தைப்போல் புனிதத்தன்மை அளிக்கக் கூடியது வேறொன்றுமில்லை. அவனுக்கு பிராம்மணத்துவம் முழுதும் சித்திக்கும் (வேதம் முழுவதிற்கும் அதிகாரம்) என்று வேதத்தை அறிந்தவர்கள் கூறுகிருர்கள்.

ஞானசித்தியாவது எல்லா உயிர்களுக்கும் அந்தரா த்மாவாகவும் அனைத்தையும் தன் வசத்தில் வைத்துக் கொண்டிருப்பவஞகவும், தனது ஒரே ரூபத்தைப் பலவாகச் செய்பவஞகவும் உள்ள ஈசுவரனை உள்ளத் தில் காண்பதேயாம். அப்படிக்காண்பவர்களுக்கே அழியாத சுகம் உண்டு, பிறர்க்கில்லை.

ஸத்தியத்தையும் தவத்தையும் கைக்கொண்டு முயல் பவர்களுக்கு எள்ளில் மறைந்திருந்த எண்ணெய் பேர்லவும், தயிரில் மறைந்திருந்த வெண்ணெய் போலும், அரணிக்கட்டையில் மறைந்திருந்த நெருப் புப் போலும் ஸாதனையின் பயஞக மறைந்திருந்த ஆத்மா வெளித்தோன்றும், அந்த ஆத்மஸாக்ஷாத்கா ரம் மனதிற்கும் வாக்கிற்கும் எட்டாத ஆனந்த நிலை, அதை உணர்ந்து புத்திமான் முக்தஞகிருன். அதுதான் பிரம்மோபநிஷத்தால் அடைய வேண்டிய பதவி.

இங்ஙனம் பிரம்மோபநிஷத்து முற்றும்.

---

# ॥ कैवल्योपनिषत् ॥ १२ ॥

ओं सहनाववतु । सहनौ भुनक्तु । सह वीर्यं करवावहै । तेजस्विनावधीतमस्तु । मा विद्विषावहै । ओं शान्तिः शान्तिः शान्तिः ॥

## கைவல்யோபநிஷத் ॥ 12 ॥

ஓம் ஸஹ நாவவது। ஸஹ நௌ புனக்து। ஸஹ வீர்யம் கரவா வஹைஹ। தேஜஸ்விநா வதீதமஸ்து மா வித்விஷாவஹை।
ஓம் சாந்தி : சாந்தி : சாந்தி : ॥

## 12. கைவல்யோபநிஷத்து

ஓம் (குருசிஷ்யர்களாகிய எங்களை) இருவரையும் சேர்த்து (பிரம்மம்) காப்பாற்றட்டும்; சேர்த்துப்போஷிக்கட்டும். இருவரும் சேர்ந்து வீரியத்துடன் உழைப்போமாக. எங்கள் அத்தியயனம் ஒளி பொருந்தியதாக வேண்டும். (நாங்கள் ஒருவரை யொருவர்) பகைத்துக் கொள்ளாமலிருக்க வேண்டும்.

ஓம் மூவ்வகையிலும் சாந்தி நிலவுக !

### உபநிஷத்தின் பெயரும் தொடர்பும்

இவ்வுபநிஷத்து கிருஷ்ண யஜுர்வேதத்தைச் சேர்ந்தது என்று முக்திகோபநிஷத்தில் கூறப்பட்டுள்ளது. இதில் பிரம்மவித்தை ஆச்வலாயனருக்கு பிரம்மாவால் உபதேசிக்கப்படுகிறது. ஸ்ரீசங்கராசாரியார் பத்து உபநிஷதங்களுக்கு மட்டும் பாஷ்யம் எழுதியிருந்த போதிலும் வேறு சில உபநிஷதங்களை முக்கியமாகக் கையாளுகிறார். அவற்றுள் ஒன்று கைவல்யோபநிஷத்து. 'கைவல்யம்' என்பது 'ஸ்வரூபப்ரதிஷ்டா அல்லது தான் தானாயிருத்தல். 'முக்திர்- ஹித்வா Sன்யதா ரூபம் ஸ்வரூபேண வ்யவஸ்திதி :' என்று ஸ்ரீமத்பாகவதம் கூறுகிறது. அந்தக் கைவல்யநிலை எய்துதற்கு வழி

## ।। प्रथमः खण्डः ।।

ओं अथाश्वलायनो भगवन्तं परमेष्ठिनमुपसमेत्योवाच ।।
अधीहि भगवन् ब्रह्मविद्यां वरिष्ठां सदा सद्भिः सेव्यमानां
निगूढाम् ।। १.१ ।।

तस्मै सहोवाच पितामहश्च श्रद्धाभक्तिध्यानयोगादवैहि
।। १.२ ।।

न कर्मणा न प्रजया धनेन त्यागेनैके अमृतत्वमानशुः ।
परेण नाकं निहितं गुहायां विभ्राजते यद्यतयो विशन्ति
।। १.३ ।।

---

கூறுவதால் இவ்வுபநிஷத்து, கைவல்யோபநிஷத்து எனப் பெயர்பெற்றது.

*முதல் கண்டம்*

1.1 அதன்மேல் ஆச்வலாயனர் பகவான் பிரம்மாவை அணுகிப் பின்வருமாறு கூறலானுர் :-

பகவானே! சிறந்ததும், எப்போதும் நல்லோர்களால் நாடப்பெற்றதும், மறைவாயுள்ளது மான பிரம்ம வித்தையை உபதேசித்தருளும்.

1.2 பாட்டனுராகிய பிரம்மா 'சிரத்தையாலும் பக்தியாலும் தியான யோகத்தாலும் அதை அடைவாயாக' என்று அவருக்குக் கூறினுர்.

1.3 கருமத்தாலன்று, மக்களாலன்று, செல்வத்தாலன்று, தியாகத்தாலேயே சிலர் சாகாநிலையை எய்தியுள்ளனர். யோகமுயற்சியுடையோர் எய்தும் அப்பதவி ஸ்வர்க்கத்தினும் சிறந்தது, புத்திகுகையில் நிலைத்துப் பிரகாசிப்பதாகும்.

## ப்ரதம : கண்ட :

ஓம் அதாச்வலாயனோ பகவந்தம் பரமேஷ்டின-முபஸமேத்யோவாச ।
அதீஹி பகவன் ப்ரஹ்ம வித்யாம் வரிஷ்டாம் ஸதா ஸத்பி: ஸேவ்ய-மாநும் நிகூடாம் ॥ 1.1 ॥

தஸ்மை ஸ ஹோவாச பிதாமஹச்ச-ச்ரத்தா -பக்தி -த்யான -யோகா -தவைஹி ॥ 1.2 ॥

ந கர்மணு ந ப்ரஜயா தனேன த்யாகேனைகே அம்ருதத்வ- மானசு: । பரேண நாகம் நிஹிதம் குஹாயாம் விப்ராஜதே யத்யதயோ விசந்தி ॥ 1.3 ॥

---

1.1 அத — அதன்மேல் — அதாவது (நித்யாநித்யவஸ்து விவேகம்) நிலையுள்ளதும் நிலையற்றதுமான பொருள்களைப்பற்றிய பகுத்தறிவு; (இஹாமுத்ரார்த்த பல போக விராகம்) இவ்வுலகங்களிலும் மரணத்திற்குப்பின் மேலுலகங்களிலும் கர்மத்தின் பயனுக ஏற்படும் இன்ப நுகர்ச்சிகளில் பற்றின்மை, (சமாதி ஷட்கஸம்பத்தி :) சமம் தமம் உபரதி, திதிக்ஷை சிரத்தை ஸமாதானம் என்ற ஆறுவகையான ஞானச்செல்வம்; (முமுக்ஷுத்வம்) முக்தியில் அவா ஆகிய இந்நான்கு ஸாதனங்களும் கூடியதற்குமேல்.

1.2 பாட்டனுர் — உலகை வளர்த்த பிரஜாபதிகளுக்குப் பிதாவாகிய பிரம்மாவைப் பாட்டனுர் எனக் கூறுவது வழக்கம்.

1.3 ந கர்மணு — இங்கு விலக்கப்பட்டது ஆசைவாய்ப்பட்டுச் செய்யும் கர்மம். பயனில் பற்றற்று உலக நன்மைக்காகவும் ஈசுவரார்ப்பணமாகவும் செய்யப்படும் கர்மம் ஞானத்திற்கு ஸாதனம்.

वेदान्तविज्ञान-सुनिश्चितार्थाः सन्न्यासयोगाद्यतय : शुद्धसत्वाः ।
ते ब्रह्मलोके तु परान्तकाले परामृताः परिमुच्यन्ति सर्वे ॥ १.४ ॥

विविक्तदेशे च सुखासनस्थः शुचिः समग्रीव-शिरः शरीरः ।
अन्त्याश्रमस्थः सकलेन्द्रियाणि निरुध्य भक्त्या स्वगुरुं प्रणम्य ॥ १.५ ॥

हृत्पुण्डरीकं विरजं विशुद्धं विचिन्त्य मध्ये विशदं विशोकम् ।
अचिन्त्य-मव्यक्त-मनन्तरूपं शिवं प्रशान्त-ममृतं ब्रह्मयोनिम् ॥ १.६ ॥

तमादिमध्यान्तविहीनमेकं विभुं चिदानन्द-मरूपमद्भुतम् ।
उमासहायं परमेश्वरं प्रभुं त्रिलोचनं नीलकण्ठं प्रशान्तम् ।
ध्यात्वा मुनिर्गच्छति भूतयोनिं समस्तसाक्षिं तमसः परस्तात् ॥ १.७ ॥

---

1.4 செம்மையான வேதாந்த ஞானத்தால் நிச்சய புத்தி உடையவர்களும், ஸந்நியாஸ யோகத்தால் பரிசுத்த மான அந்தக்கரண முடையவர்களுமான துறவிகளாகிய அவர்கள் எல்லோரும் பராம்ருதமாகிய பிரம்மத்தில் நிலை பெற்று (ஜீவன் முக்தர்களாகவே வாழ்ந்து) அந்தியகாலத்தில் (சரீரம் விழுந்தபின்) பற்றனைத்தினின்றும் அறவே விடுபடுகின்றனர்.

1.5 கடைசி ஆசிரமத்திலுள்ள ஸந்நியாஸியானவன் தனிமையான இடத்தில் சுகமான ஆசனத்திலமர்ந்து,

வேதாந்த-விஜ்ஞான — ஸுநிச்சிதார்த்தா:
ஸந்ந்யாஸ- யோகாத்-யதய: சுத்தஸத்வா : ।
தே ப்ரஹ்மலோகே து பராந்தகாலே
பராம்ருதா : பரிமுச்யந்தி ஸர்வே ॥ 1.4 ॥

விவிக்த- தேசே ச ஸுகாஸனஸ்த்த : சுசி: ஸமக்ரீவ-
சிர: சரீர: । அந்த்யாச்ரமஸ்த: ஸகலேந்த்ரியாணி
நிருத்ய பக்த்யா ஸ்வகுரும் ப்ரணம்ய ॥ 1.5 ॥

ஹ்ருத்புண்டரீகம் விரஜம் விசுத்தம் விசிந்த்ய
மத்யே விசதம் விசோகம் । அசிந்த்ய-மவ்யக்த
— மனந்த ரூபம் சிவம் ப்ரசாந்த-மம்ருதம்
ப்ரஹ்ம-யோனிம் ॥ 1.6 ॥

தமாதி -மத்யாந்த-விஹீனமேகம் விபும் சிதானந்த
-மரூப-மத்புதம் । உமா- ஸஹாயம் பரமேச்வரம்
ப்ரபும் த்ரிலோசனம் நீலகண்டம் ப்ரசாந்தம் ।
த்யாத்வா முனிர்- கச்சதி பூதயோனிம்
ஸமஸ்தஸாக்ஷிம் தமஸ: பரஸ்தாத் ॥ 1.7 ॥

---

பரிசுத்தமானவனுய், கழுத்து, தலை, உடல் ஆகியவற்றைச்சமமாய் நிறுத்தி, எல்லா இந்திரியங்களையும் அடக்கி பக்தியுடன் தன் குருவை வணங்கி;

1.6 இருதய கமலமத்தியில் அழுக்கற்றதும் பரிசுத்தமானதும், தெளிவானதும், துன்பமற்றதும், சிந்தனைக் கெட்டாததும், வெளிப்படையாய்த்தோன்ருததும், எண்ணற்ற வடிவுடையதும், மங்களமும் சாந்தமும் நிறைந்ததும், அழிவற்றதுமான, பிரம்மாண்டங்களின் பிறப்பிடமும்;

1.7 ஆதியும் நடுவும் முடிவுமில்லாததும் ஒன்றேயாகியதும், எங்கும் நிறைந்ததும் அறிவும் ஆனந்தமுமே வடிவாகியதும், வேறு வடிவற்றதும், அற்புதமானதும்

स ब्रह्मा स शिवः सेन्द्रः सोऽक्षरः परमःस्वराद् ।
स एव विष्णुः स प्राणः स कालोऽग्निः स चन्द्रमाः
॥ १.८ ॥

स एव सर्वं यद्भूतं यच्च भव्यं सनातनम् । ज्ञात्वा तं
मृत्युमत्येति नान्यः पन्था विमुक्तये ॥ १.९ ॥
सर्वभूतस्थ-मात्मानं सर्वभूतानिचात्मनि ।
संपश्यन् ब्रह्मपरमं याति नान्येन हेतुना ॥ १.१० ॥

आत्मान मरणिं कृत्वा प्रणवं चोत्तरारणिम् ।
ज्ञाननिर्मथनाभ्यासात्पापं दहति पण्डितः ॥ १.११ ॥

ஆகிய பரம்பொருளை பரம்சாந்தனும் நீலகண்டனும் முக்கண்ணனும் உமாதேவியுடன் கூடியவனும் பிரபுவுமாகிய பரமேச்வரனுக தியானித்து, உண்டாய உலகின் உற்பத்திஸ்தானமும், அனைத்திற்கும் ஸாக்ஷியும், அறியாமையாகிற இருளைக்கடந்ததுமான நிலையை அம் முனிவன் அடைகிறுன்.

1.8 அவனே பிரம்மா, அவனே சிவன், அவனே இந்திரன், அவனே அழிவில்லாதவன், உயர்ந்தவன், தன்னைத் தானேயாள்பவன். அவனே விஷ்ணு, அவனே

---

1.4 இந்த மந்திரம் மஹாநாராயண உபநிஷத்திலும் முண்டகோபநிஷத்திலும் காணப்படுகின்றது.

1.5 ஒ. கீ. 6.10-14.
சுவே. உப. 2.8-11.

1.7 உமாஸஹாயம் — நிர்க்குண பிரம்மஞானம் சித்திக்க ஸகுணமூர்த்தியான உமாமஹேசுவரனை தியானம் செய்ய வேண்டும். 'உமா ஹைமவதீ' இந்திரனுக்கு ஞானத்தை யருளியதாகக் கேன உபநிஷத்தில் கதை உளது.

ஸ ப்ரஹ்மா ஸ சிவ: ஸேந்த்ர: ஸோऽக்ஷர: பரம: ஸ்வராட் । ஸ ஏவ விஷ்ணு: ஸ ப்ராண: ஸ காலோ ऽக்னி: ஸ சந்த்ரமா : ॥ 1.8 ॥

ஸ ஏவ ஸர்வம் யத்பூதம் யச்ச பவ்யம் ஸநாதனம் । ஜ்ஞாத்வா தம் ம்ருத்யு -மத்யேதி நான்ய : பந்தா விமுக்தயே ॥ 1.9 ॥

ஸர்வ -பூதஸ்த- மாத்மானம் ஸர்வ-பூதானிசாத்மனி । ஸம்பச்யன் ப்ரஹ்ம பரமம் யாதி நான்யேன ஹேதுனு ॥ 1.10 ॥

ஆத்மான-மரணிம் க்ருத்வா ப்ரணவஞ் சோத்தராரணிம் । ஜ்ஞான- நிர்மதனுப்யாஸாத் பாபம் தஹதி பண்டித : ॥ 1.11 ॥

---

பிராணன், அவனே காலன், அக்கினி, அவனே சந்தி ரன்.

1.9 உண்டானதும், உண்டாகப்போவதும், என்று முள்ள் தும், எல்லாமும் அவனே. அவனே அறிந்து ஒருவன் சாவைக் கடந்து செல்லுகிறுன். முக்திக்கு வேறு வழி யில்லே.

1.10 எல்லா உயிர்களிலும் தன்னேயும், தன்னிடம் எல்லா உயிர்களேயும் நன்கு கண்டுகொண்டு ஒருவன் பரப்பிரம் மத்தையடைகிறுன்; வேறு எக்காரணத்தாலும் அன்று.

1.11 தன்னேக்கீழ் அரணிக்கட்டையாகவும் பிரணவத்தை (ஓங்காரத்தை) மேல் அரணிக்கட்டையாகவும் செய்து ஞானத்தால் திரும்பத் திரும்பக் கடைந்து அறிவாளி பாவத்தைச் சுட்டெரிக்கிறுன்.

---

1.8 ஒ. நாராயணஸூக்தம்.

1.10 ஒ. ஸர்வபூதஸ்த-மாத்மானம் ஸர்வபூதானி சாத்மனி । ஈக்ஷதே யோகயுக்தாத்மா ஸர்வத்ர ஸமதர்சன : ॥ — கீ. 6.29.

स एव मायापरिमोहितात्मा शरीरमास्थाय करोति सर्वम् ।
स्त्रियन्नपानादि-विचित्रभोगैः स एव जाग्रत्परितृप्तिमेति
॥ १.१२ ॥

स्वप्ने स जीवः सुखदुःखभोक्ता स्वमायया कल्पितजीवलोके ।
सुषुप्ति-काले सकले विलीने तमोऽभिभूतः सुखरूपमेति
॥ १.१३ ॥

पुनश्च जन्मान्तर-कर्मयोगात् स एव जीवः स्वपिति प्रबुद्धः ।
पुरत्रये क्रीडति यश्च जीवस्ततः सुजातं सकलं विचित्रम ॥
आधारमानन्द-मखण्डबोधं यस्मिंल्लयं याति पुरत्रयं च
॥ १.१४ ॥

---

1.12 மாயையால் மதியிழந்த ஜீவன் எவனோ அவனே சரீரத்திலிருந்து எல்லாவற்றையும் செய்கிறான். ஸ்த்ரீ, அன்னம், பானம் முதலிய பலவகைப்பட்ட போகங்களால் அவனே விழிப்புநிலையில் திருப்தியை அடைகிறான்.

1.13 கனவு நிலையில் அந்த ஜீவன் தனது மாயையால் (அவித்தையால்) கல்பிக்கப்பட்ட ஜீவலோகத்தில் இன்ப. துன்பங்களை அனுபவிப்பவனாகிறான். உறக்க நிலையில் அனைத்தும் ஒழிவடைந்தபோது அறியாமையாகிற இருளில் ஆழ்ந்து இன்பவடிவை எய்துகிறான்.

1.14 மீண்டும் முற்பிறவிகளில் செய்த வினைகளின் கூட்டுறவால் திரும்பத்திரும்ப அதே ஜீவன் தூங்கியும் விழித்தும் முப்புரங்களிலும் (ஸ்தூல ஸூக்ஷ்ம காரண சரீரங்

ஸ ஏவ மாயாபரிமோஹிதாத்மா சரீரமாஸ்தாய கரோதி ஸர்வம்। ஸ்த்ரியன்னபாஞதி - விசித்ர-போகைர் ஸ ஏவ ஜாக்ரத் பரித்ருப்திமேதி ॥ 1.12 ॥

ஸ்வப்னே ஸ ஜீவ: ஸுகது:க்கபோக்தா ஸ்வமாயயா கல்பித-ஜீவலோகே।ஸுஷுப்திகாலே ஸகலே விலீனே தமோऽபிபூத : ஸுகரூபமேதி ॥ 1.13 ॥

புனச்ச ஜன்மாந்தர- கர்மயோகாத் ஸ ஏவ ஜீவ: ஸ்வபிதி ப்ரபுத்த :। புரத்ரயே க்ரீடதி யச்ச ஜீவஸ்தத: ஸுஜாதம் ஸகலம் விசித்ரம் ॥ ஆதாரமானந்த - மகண்ட- போதம் யஸ்மின் லயம் யாதி புரத்ரயஞ்ச ॥ 1.14 ॥

---

களில்) விளையாடுகிருன். அவனிடமிருந்தே விசித்திர மான இவ்வனைத்தும் தோன்றியுள்ளது. எவனிடத்தில் முப்புரங்களும் ஒடுங்குகின்றனவோ அவன் தான் ஆதா ரமாகவும், ஆனந்த மயஞகவும் பிளவுபடாத அறிவின் விழிப்புடையவஞகவும் உள்ளவன் (ஆத்மா).

---

1.13 தமோऽபிபூத : ஸுகரூபமேதி — அறியாமையாகிற இருளில் ஆழ்வதும் அதில் இன்பம் காண்பதும் ஸுஷுப்தி நிலையின் லக்ஷணம். அறியாமை தான் ஸு ஷுப்திக்கும் ஸமா திக்கும் வித்தியாஸம்.
ஒ. சா.உப. 1.11. மா.உப. 5.

1.14 இங்கு கூறப்படுவது நாலாவதாகிய துரீயநிலை. இதில் மற்ற நிலைகள் ஒடுங்குகின்றன. ஒ. ப்ரபஞ்சோபசமம் சாந்தம் சிவ-மத்வைதம் சதுர்த்தம் மன்யந்தே ஸ ஆத்மா ஸ விஜ்ஞேய :।
மா. உப.7.

एतस्माज्जायते प्राणो मनः सर्वेन्द्रियाणि च ।
खं वायु-र्ज्योतिरापश्च पृथ्वी विश्वस्य धारिणी
॥ १.१५ ॥

यत्परं ब्रह्म सर्वात्मा विश्वस्यायतनं महत् ।
सूक्ष्मात्सूक्ष्मतरं नित्यं स त्वमेव त्वमेव तत् ॥ १.१६ ॥

जाग्रत्सवप्न-सुषुप्तयादि-प्रपंचं यत्प्रकाशते ।
तद्ब्रह्माह-मिति ज्ञात्वा सर्व बन्धैः प्रमुच्यते ॥ १.१७ ॥
त्रिषु धामसु यद्भोग्यं भोक्ता भोगश्च यद्भवेत् ।
तेभ्यो विलक्षणः साक्षी चिन्मात्रोऽहं सदाशिवः
॥ १.१८ ॥

मय्येव सकलं जातं मयि सर्वं प्रतिष्ठितम् ।
मयि सर्वं लयं याति तद्ब्रह्माद्वयमस्म्यहम्
॥ १.१९ ॥

1.15 இதிலிருந்தே பிராணனும், மனதும், எல்லா இந்திரியங்களும், ஆகாசமும், வாயுவும், அக்கினியும், அப்புவும், அனைத்தையும் தாங்கும் பூமியும் உண்டாகின்றன.

1.16 எது பரப்பிரம்மமோ, அனைத்திற்கும் ஆத்மாவோ, உலகிற்குப் பெரிய இருப்பிடமோ, நுட்பத்திற்கும் அதிக நுட்பமானதோ, என்று முளதோ அது நீயே, நீயே அது.

1.17 விழிப்பு, கனவு, உறக்கம் முதலிய பிரபஞ்சத்தை எது பிரகாசிப்பிக்கிறதோ, 'அந்த பிரம்மம் நானே' என்று அறிந்து (ஒருவன்) எல்லாக்கட்டுகளினின்றும் விடுபடுகிறான்.

ஏதஸ்மாஜ் ஜாயதே ப்ராணோ மன: ஸர்வேந்த்ரியாணி ச । கம் வாயுர்-ஜ்யோதி-ராபச்ச ப்ருத்வீ விச்வஸ்ய தாரிணீ ॥ 1.15 ॥

யத்பரம் ப்ரஹ்ம ஸர்வாத்மா விச்வஸ்யாயதனம் மஹத் । ஸூக்ஷ்மாத் - ஸூக்ஷ்மதரம் நித்யம் ஸ த்வமேவ த்வமேவ தத் ॥ 1.16 ॥

ஜாக்ரத்-ஸ்வப்ன-ஸுஷுப்த்யாதி - ப்ரபஞ்சம் யத்ப்ரகாசதே । தத் ப்ரஹ்மாஹ- மிதி ஜ்ஞாத்வா ஸர்வபந்தை: ப்ரமுச்யதே ॥ 1.17 ॥

த்ரிஷு தாமஸு யத்போக்யம் போக்தா போகச்ச யத்பவேத் । தேப்யோ விலக்ஷண: ஸாக்ஷீ சின்மாத்ரோ Sஹம் ஸதாசிவ : ॥ 1.18 ॥

மய்யேவ ஸகலம் ஜாதம் மயி ஸர்வம் ப்ரதிஷ்டிதம் । மயி ஸர்வம் லயம் யாதி தத் ப்ரஹ்மாத்வயமஸ்ம்யஹம் ॥ 1.19 ॥

1.18 மூன்று நிலைகளிலும் எது அனுபவிக்கப்படுவதாக வும், எது அனுபவிப்பவனுகவும் அனுபவமாகவும் ஆகின்றதோ, அவற்றினின்று வேருகவும் ஸாக்ஷியாக வும், கேவல அறிவு வடிவினனுகவும், என்றும் மங்கள வடிவினன் (ஸதா சிவன்) ஆகவும் உள்ளவன் நான்.

1.19 என்னிடமிருந்தே அனைத்தும் உண்டாயிருக்கிறது, என்னிடமே அனைத்தும் நிலைத்திருக்கிறது, என்னிடமே அனைத்தும் லயமடைகிறது. இரண்டற்ற அந்த பிரம் மாக நான் இருக்கிறேன்.

1.15 ஒ. மு. உப. 2.1.3.

1.16 'தத்-த்வமேவ, த்வமேவ தத்'
ஒ. 'தத் ஸத்யம் ஸ ஆத்மா தத்-த்வமஸி ச்வேதகேதோ இதி' — சா. உப. அத்.6.

## ।। द्वितीयः खण्डः ।।

अणोरणीया-नहमेव तद्वन्महानहं विश्वमहं विचित्रम ।
पुरातनोऽहं पुरुषोऽहमीशो हिरणमयोऽहं शिवरूपमस्मि ।
।। २.१ ।।

अपाणिपादोऽह-मचिन्त्यशक्तिः पश्याम्यचक्षुः स
शृणोम्यकर्णः ।
अहं विजानामि विविक्तरूपो न चास्ति वेत्ता मम
चित्सदाऽहम् ।। २.२ ।।

वेदैरनेकै-रहमेव वेद्यो वेदान्तकृद्वेदविदेव चाहम् ।
न पुण्यपापे मम नास्ति नाशो न जन्म-देहेन्द्रिय-बुद्धिरस्ति
।। २.३ ।।

न भूमिरापो न च वह्निरस्ति न चानिलो मेऽस्ति न चाम्बरं च
।। २.४ ।।

### இரண்டாவது கண்டம்

2.1 அணுவுக்கும் அணுவானவன் நான்; அவ்வாறே பெரியவனும் நானே; பலவகைப்பட்ட உலகும் நானே; நான் பழைமையானவன்; (உடல்களில் உறையும்) புருஷன் நான்; ஈசன் நான்; பொன்போலொளிர்பவன் நான்; மங்களவடிவினனாய் நான் இருக்கிறேன்.

1.19 ஒ. ஸர்வகத்வா-தனந்தஸ்ய ஸ ஏவாஹ-மவஸ்தித :। மத்த : ஸர்வமஹம் ஸர்வம் மயி ஸர்வம் ஸநாதனே ॥ அஹமேவா க்ஷயோ நித்ய: பராத்மாத்ம -ஸமாச்ரய:। ப்ரஹ்மஸம்ஜ்ஞோऽஹ மேவாக்ரே ததாந்தே ச பர: புமான் ॥
— பிரஹ்லாதன் — விஷ்ணுபுராணம் : 1.19. 85-86.

## த்விதீய : கண்ட :

அணோ - ரணீயா- னஹமேவ தத்வன்-
மஹானஹம் விச்வமஹம் விசித்ரம் । புராதனோऽஹம் புருஷோऽஹமீசோ ஹிரண்மயோऽஹம்
சிவ - ரூபமஸ்மி ॥ 2.1 ॥

அபாணி-பாதோऽஹ - மசிந்த்ய-சக்தி: பச்யாம்ய
சக்ஷு: ஸ ச்ருணோம்யகர்ண: । அஹம் விஜானாமி
விவிக்தரூபோ ந சாஸ்தி வேத்தா மம சித்ஸதா
ऽஹம் ॥ 2.2 ॥

வேதை-ரனேகை-ரஹமேவ வேத்யோ வேதாந்த
க்ருத்வேதவிதேவ சாஹம் । ந புண்யபாபே மம
நாஸ்தி நாசோ ந ஜன்ம
தேஹேந்த்ரிய - புத்தி - ரஸ்தி ॥ 2.3 ॥

ந பூமிராபோ ந ச வஹ்னிரஸ்தி
ந சானிலோ மே ऽஸ்தி ந சாம்பரஞ்ச ॥ 2.4 ॥

---

2.2 கைகளும் கால்களும் இல்லாத நான் நினைக்கொணாச் சக்திபடைத்தவன்; கண்ணில்லாமல் காண்கிறேன்; அப்படிப்பட்ட நான் காதில்லாமல் கேட்கிறேன். நான் அனைத்தையும் அறிகிறேன்; (அனைத்தினின்றும்) வேறான வடிவுடையவன்; என்னை அறிபவன் எவனும் இல்லை; எப்போதும் நான் அறிவு வடிவினனே.

2.3 அனேகவேதங்களால் அறியப்படவேண்டியவன் நானே; வேதத்தைச் செய்தவனும் வேதத்தை உணர்ந்தவனும் நானே, எனக்குப்புண்ணியமுமில்லை பாவமுமில்லை. அழிவுமில்லை பிறவியுமில்லை. உடலும் இந்திரியங்களும் புத்தியும் இல்லை.

2.4 எனக்கு பூமியுமில்லை, நீருமில்லை, அக்கினியுமில்லை, காற்றுமில்லை, ஆகாசமுமில்லை.

एवं विदित्वा परमात्मरूपं गुहाशयं निष्कलमद्वितीयम् ।
समस्तसाक्षिं सदसद्विहीनं प्रयाति शुद्धं परमात्मरूपम्
॥ २.५ ॥

यः शतरुद्रीय-मधीते सोऽग्निपूतो भवति स वायुपूतो भवति स आत्मपूतो भवति स सुरापानात्पूतो भवति स ब्रह्महत्यायाः पूतो भवति स सुवर्णस्तेयात्पूतो भवति तस्मादविमुक्त-माश्रितो भवत्यत्याश्रमी सर्वदा सकृद्वा जपेत्
॥ २.६ ॥

अनेन ज्ञानमाप्नोति संसारार्णवनाशनम् ।
तस्मादेवं विदित्वैनं कैवल्यं परमश्नुते ।
कैवल्यं परमश्नुत इति ॥ २.७ ॥

ओं सहनाववतु इति शान्तिः ॥

॥ इति कैवल्योपनिषत् समाप्ता ॥

2.5 இருதய குகையில் உறைபவனும், பகுக்கப்படாதவனும், இரண்டற்றவனும், அனைத்திற்கும் ஸாக்ஷியும் காரியத்திற்கும் காரணத்திற்கும் (உளதிற்கும் இலதிற்கும்) அப்பாற்பட்டவனும், ஆகிய பரமாத்மரூபத்தை இங்ஙனம் அறிந்து ஒருவன் பரிசுத்தமாகிய பரமாத்மரூபத்தையே அடைந்து விடுகிறான்.

2.6 எவன் சதருத்ரீயத்தை அத்தியயனம் செய்கிறானோ அவன் அக்னியால் பரிசுத்த மடைந்தவன் போலும்

2.2 ஒ. சுவே. உப. 3.19-20.

2.3 ஒ. கீ. 15.15

ஏவம் விதித்வா பரமாத்ம - ரூபம் குஹாசயம் நிஷ்கல-மத்விதீயம் । ஸமஸ்த - ஸாக்ஷிம் ஸத்ஸத்விஹீனம் ப்ரயாதி சுத்தம் பரமாத்ம ரூபம் ॥ 2.5 ॥

ய : சதருத்ரீயமதீதே ஸோ Sக்னிபூதோ பவதி ஸ வாயுபூதோ பவதி ஸ ஆத்ம பூதோ பவதி ஸஸுராபாஞத்பூதோ பவதி ஸ ப்ரஹ்மஹத்யா. பூதேர் பவதி ஸ ஸுவர்ணஸ்தேயாத் பூதோ பவதி தஸ்மா- தவிமுக்த — மாச்ரிதோ ப்வத்யத்யாச்ரமீ ஸர்வதா ஸக்ருத்வா ஜபேத் ॥ 2.6

அனேன ஜ்ஞானமாப்னோதி ஸம்ஸாரார்ணவ நாசனம் । தஸ்மா -தேவம் விதித்வைனம் கைவல்யம் பரமச்னுதே । கைவல்யம் பரமச்னு த இதி ॥ 2.7 ॥

ஓம் ஸஹநாவவது இதி சாந்தி : ॥
॥ இதி கைவல்யோபநிஷத் ஸமாப்தா ॥

---

வாயுவால் பரிசுத்த மடைந்தவன் போலும் ஆத்மா வால் பரிசுத்தமடைந்தவன் போலும் ஆகிறான். அவன் மதுபான தோஷத்தினின்று பரிசுத்தியடைகிறான் பிரம்ம ஹத்திலினின்று பரிசுத்தியடைகிறான், பொன்னைத்திருடியதினின்று பரிசுத்தியடைகிறான். அதனால் ‘அவிமுக்தம்’ எனும் பதவியை அடைகிறான். அத் யாச்ரமி எப்போதும் அல்லது (ஒவ்வொரு நாளும்) ஒரு தடவையாவது ஜபிக்கவேண்டும்.

2.7 பிறவிக்கடலை அழிக்கும் (வற்றச்செய்யும்) ஞானத்தை இதனால் ஒருவன் அடைகிறான். ஆகையால் இங்ஙன மிதையறிந்து ஒருவன் உயர்ந்த கைவல்யத்தை (தான் தானாய்நிற்கும் முக்தியின்பத்தை) அனுபவிக் கிறான். உயர்ந்த கைவல்யத்தை அனுபவிக்கிறான் என்ற வாறு.

ஓம் ஸ ஹ நாவது (குருசிஷ்யர்களாகிய எங்களை) இருவரையும் சேர்த்து (பிரம்மம்) காப்பாற்றட்டும் — என்று சாந்தி பாடம்.

2.6 சதருத்ரீயம் — ஸ்ரீருத்ரப்ரச்னம் : யஜுர்வேதம். கைவல்ய உபநிஷத்திற்கு பாஷ்யம் எழுதியுள்ள நாராயணதீர்த்தர் என் பவர் இதை 'ப்ரஹ்ம சதருத்ரீயம்' என்று கூறுகிறார். தைத் திரீய ஸம்ஹிதையிலுள்ள சதருத்ரீயத்தை ஸகுணப் பிரம்ம உபாஸனை யென்றும் கைவல்ய உபநிஷத்திலுள்ளதை நிர்க் குணப் பிரம்ம உபாஸனை என்றும் அவர் சொல்கிறார்.

அவிமுக்தம் — பிரளயத்திலும் உமாமஹேசுவரன் காசியை விட்டு நீங்காததால் காசிக்கு அவிமுக்த க்ஷேத்ரம் எனப்பெ யர். தேகத்தில் புருவமத்திக்கும் அவிமுக்தம் எனப்பெயர். ஆறு ஆதாரசக்கரங்களில் இங்குள்ளது ஆக்ஞா சக்கரம். இங்கு மனது நிலைக்கும் போது ஞானம் அனுபவத்திற்கு வருகிறது.

2.7 கைவல்யம் பலமச்னுதே

இங்ஙனம் கைவல்யோபநிஷத்து முற்றும்.

## உபநிஷத்தின் விஷயச்சுருக்கம்

ஆச்வலாயனர் பிரம்மாவை அணுகிப் பிரம்ம வித்தையை உபதேசிக்கும்படி கேட்டுக்கொண்டார். பிரம்மா உபதேசித்ததாவது : — சிரத்தையாலும் பக் தியாலும் தியான யோகத்தாலும் அதை அடைய இயலும்; கருமத்தாலன்று, மக்களாலன்று, செல்வத் தாலனறு; இவற்றின் தியாகத்தாலேயே சிலர் சாகா நிலையை எய்தியுள்ளனர். யோக முயற்சியுடையோர் எய்தும் அந்நிலை ஸ்வர்க்கத்தினும் சிறந்தது. ஒவ்வொரு வர் புத்தி குகையிலும் நிலைத்துப் பிரகாசிப்பதாம். செம்மையான வேதாந்த ஞானத்தால் நிச்சயபுத்தி உடையவர்களும் ஸந்நியாஸ யோகத்தால் பரிசுத்த மான அந்தக்கரண முடையவர்களுமான துறவிகள் பராமிருத மாகிய பிரம்மத்தில் நிலை பெற்று ஜீவன் முக்

தர்களாகவே வாழ்ந்து சரீரம் விழுந்தபின் பற்றனைத்தி னின்றும் அறவே விடுபடுகின்றனர். துறவியானவன் தனிமையான இடத்தில் சுகமான ஆஸனத்திலமர்ந்து பரிசுத்தமானவனாய் கழுத்து, தலை, உடல் ஆகியவற்றைச் சமமாய் நிறுத்தி எல்லா இந்திரியங்களையுமடக்கி பக்தி யுடன் தன் குருவை வணங்கி இருதயகமலத்தில் மாசற்ற தும் பரிசுத்தமானதும் தெளிவானதும் துன்பமற்றதும் சிந்தனைக்கெட்டாததும் வெளிப்படையாய்த் தோன்றா தெனினும் எண்ணற்ற வடிவுகளின் அடிப்படையாய் விளங்கு வதும் மங்களமும் சாந்தமும் நிறைந்ததும் அழிவற்றதும் பிரம்மாண்டங்களின் பிறப்பிடமாவ தும் ஆதி நடுமுடிவில்லாததும் ஒன்றேயாகி எங்கும் நிறைந்ததும் அறிவும் ஆனந்தமுமே வடிவாகியதும் வேறு வடிவற்றதும் அற்புத மானதுமாகிய பரம் பொருளைப் பரமசாந்தனும் நீலகண்டனும் முக்கண்ண னும் உமா தேவியுடன் கூடியவனும் பிரபுவுமாகிய பரமேசுவரனாக தியானித்து உண்டாகிய உலகின் உற் பத்திஸ்தானமும் அனைத்திற்கும் ஸாக்ஷியும் அறியாமை யாகிற இருளைக்கடந்ததுமான நிலையை அடைகிறான். அவனே பிரம்மா, அவனே சிவன், அவனே இந்திரன், அவனே அழிவிலாதவன், உயர்ந்தவன், தன்னைத்தானே யாள்பவன்; அவனே விஷ்ணு, அவனே பிராணன், அவனே காலன், அக்கினி, சந்திரன்; உண்டானதும், உண்டாகப் போவதும், என்றுமுள்ளதும். எல்லாமும் அவனே. அவனையறிந்து ஒருவன் சாவைக்கடந்து செல்லுகிறான். முக்திக்கு வேறு வழியில்லை. எல்லா உயிர்களிலும் தன்னையும், தன்னிடம் எல்லா உயிர்களை யும் நன்கு கண்டுகொண்டு ஒருவன் பரப்பிரம்மத்தை அடைகிறான்; வேறு எக்காரணத்தாலு மன்று.

தன்னைக் கீழரணிக்கட்டையாகவும் பிரணவத்தை மேல் அரணிக்கட்டையாகவும் செய்து ஞானத்தால் திரும்பத் திரும்பக் கடைந்து அறிவாளி பாவத்தைச் சுட்டெரிக்கிறான். மாயையால் மதியிழந்தவன், ஸ்திரீ,

அன்னம், பானம் முதலியவற்றில் இன்பந்தேடிக் கொண்டும், அதைப்பற்றியே கனவு கண்டு கொண்டும் காலத்தைக் கழிக்கிருன்.

எது பரப்பிரம்மமோ, அனைத்திற்கும் ஆத்மாவோ, உலகிற்குப் பெரிய இருப்பிடமோ, நுட்பத்திற்கும் அதிக நுட்பமானதோ, என்று முளதோ அந்த பிரம்மம் நானே என்று அறிந்து ஒருவன் எல்லாக் கட்டுகளினின் றும் விடுபடுகிருன். இங்ஙனம் ஒருவன் தான் தாளுய் நிற்கும் கைவல்யமுக்தி இன்பத்தை அனுபவிக்கிருன்.

---

# जाबालोपनिषत् ॥ १३ ॥

**ओं पूर्णमदः पूर्णमिदं पूर्णात् पूर्ण-मुदच्यते ।**
**पूर्णस्य पूर्ण-मादाय पूर्ण-मेवावशिष्यते ॥**
**ओं शान्तिः शान्तिः शान्तिः ॥**

## 13. ஜாபாலோபநிஷத்

ஓம் பூர்ணமத: பூர்ணமிதம் பூர்ணாத் பூர்ணமுதச்யதே ।
பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவாவசிஷ்யதே ॥
ஓம் சாந்தி: சா ந்தி: சாந்தி: ॥

ஓம். அது பூர்ணம். இதுவும் பூர்ணம். பூர்ணத்திலிருந்து பூர்ணம் உதயமாயுள்ளது. பூர்ணத்தினின்று பூர்ணத்தை எடுத்தும் பூர்ணமே எஞ்சி நிற்கிறது.

## 13. ஜாபாலோபநிஷத்து

பெயரும் தொடர்பும்: — முக்திகோபநிஷத்துக் கூறும் வரிசையில் இது 13வதாக வருகிறது. 'பூர்ணமத:' என்று சாந்தி பாடத்தில் அடையாளத் தால் இது சுக்ல யஜுர் வேதத்தைச் சார்ந்தது என்பது அறியப்படும்.

இதைத் தொகுத்துக் கூறியவர் ஜாபால மகரிஷி யாதலால் இது ஜாபாலோபநிஷத்து எனப் பெயர் பெற்றுள்ளது. இதிலுள்ள ஆறு கண்டங்களில் முதலில் 'அவிமுக்தம்' என்றும் 'குருக்ஷேத்ரம்' என்றும் கூறப் படும் பிரம்மஸ்தானம் உடலிலுள்ள புருவமத்தி என்றும், அதை அறிந்தவனுக்கு அந்திய காலத்தில் ஸ்ரீருத்ரர் தாரகமந்திரத்தை உபதேசித்து முக்தியை

## ॥ प्रथमः खण्डः ॥

बृहस्पतिरुवाच याज्ञवल्क्यम् । यदनु कुरुक्षेत्रं देवानां देवयजनं सर्वेषां ब्रह्मसदनम् । अविमुक्तं वै कुरुक्षेत्रं देवानां देवयजनं सर्वेषां भूतानं ब्रह्मसदनम् । तस्माध्यत्र क्वचन गच्छति तदेव मन्येतेति । इदं वै कुरुक्षेत्रं देवानां देवयजनं सर्वेषां भूतानां ब्रह्मसदनम् । अत्र हि जन्तोः प्राणेषूत्क्रममाणेषु रुद्रस्तारकं ब्रह्म व्याचष्टे येनासोवमृतो भूत्वा मोक्षी भवति तस्मादविमुक्तमेव निषेवेत अविमुक्तं न विमुंचेदेवमेवैतद्याज्ञवल्क्य ॥ १ ॥

---

அளிக்கிருர் என்றும் கூறப்படுகிறது. இரண்டாவதில் புருவமத்தி வாராணஸீ தான் என்று கூறப்படுகிறது. மூன்ருவதில் ருத்ர ஜபத்தின் பெருமை கூறப்படுகிறது. நாலாவது ஐந்தாவது ஆருவது கண்டங்களில் ஸந்நியாஸ லக்ஷணமும் பரமஹம்ஸ லக்ஷணமும் யாஜ்ஞவல்கிய மகரிஷியால் விளக்கப்படுகிறது.

### முதல்கண்டம்

1. பிருஹஸ்பதி யாக்ஞவல்க்யருக்கு உபதேசித்ததாவது. — (பிராணனுக்கு) குருக்ஷேத்ரமும் (முக்கியமான இடம்) (உடலில் உறையும் பிரகாசமான இந்திரியங்களாகிய) தேவர்களுடைய தேவ பூஜாஸ்தானமும் எல்லாப் பிராணிகளுக்கும் பிரம்மஸதனம் எனப்படுவதும் எது என்ருல் அவிமுக்தம் என்பது தான், பிராணனுக்கு முக்கிய ஸ்தானமாகிய குருக்ஷேத்திரம்; அதுதான் இந்திரிய தேவதைகளின் தேவ பூஜாஸ்தானம்; அதுதான் எல்லாப்பிராணிகளும் முடிவில்

## ப்ரதம: கண்ட:

ப்ருஹஸ்பதிருவாச யாஜ்ஞவல்க்யம் ।
யதனு குருக்ஷேத்ரம் தேவானும் தேவயஜனம்
ஸர்வேஷாம் ப்ரஹ்ம ஸதனம் । அவிமுக்தம் வை
குருக்ஷேத்ரம் தேவானும் தேவயஜனம்
ஸர்வேஷாம் பூதானும் ப்ரஹ்மஸதனம் ।
தஸ்மாத்யத்ரகவசன கச்சதி ததேவ மன்யேதேதி ।
இதம் வை குருக்ஷேத்ரம் தேவானும் தேவயஜனம்
ஸர்வேஷாம் பூதானும் ப்ரஹ்மஸதனம் ।
அத்ர ஹி ஜந்தோ:
ப்ராணேஷு உத்க்ரமமாணேஷு
ருத்ரஸ் தாரகம் ப்ரஹ்ம வ்யாசஷ்டே
யேநாஸோவம்ருதோ பூத்வா மோக்ஷீ பவதி
தஸ்மாதவிமுக்த -மேவ நிஷேவேத அவிமுக்தம் ந
விமுஞ்சேதேவ -மேவைதத் யாஜ்ஞவல்க்ய ॥

---

அடைய வேண்டிய பிரம்மஸதனம். ஆகையால் ஒரு வன் ஏதோ ஒரு இடத்திற்குச் சென்ருலும் அதையே குருக்ஷேத்தரம் (பிராணனுடைய ஸ்தானம்) என்றும் இந்திரிய தேவர்களின் பூஜாஸ்தானம் என்றும், பிராணிகள் அடைய வேண்டிய பிரம்ம ஸதனம் என்றும், கருத வேண்டும். ஒரு ஜீவனின் பிராணன் உடலைவிட்டுக் கிளம்புகையில் பகவான் ருத்ரர் அங்கு தோன்றி அந்த ஜீவனுக்கு தாரகப்பிரம்மத்தை உபதே சிப்பார். அதனுல் அந்த ஜீவன் சாகாநிலையை அடைந்து முக்தி எய்தும். ஆகையால் அவிமுகதத்தைச் சேவிக்க வேண்டும். அவிமுக்தத்தை விடக்கூடாது. யாக்ஞவல்கியரே! அது அப்படித்தான் என்பது முடிவு.

அவிமுக்தம் எது என்பது அடுத்த கண்டத்தில் விளக்கப்படும்.

## ।। द्वितीयःखण्डः ।।

अथ हैनमत्रिः पप्रच्छ याज्ञवल्क्यम् । य एषोऽनन्तो ऽव्यक्त आत्मा तं कथमहं विजानीयामिति । सहोवाच याज्ञवल्क्यः । सोऽविमुक्त उपास्यो य एषोऽनन्तो ऽव्यक्त आत्मा सोऽविमुक्ते प्रतिष्ठित इति ।। २.१ ।।

सोऽविमुक्तः कस्मिन् प्रतिष्ठित इति । वरणायां नास्यां च मध्ये प्रतिष्ठित इति । का वै वरणा का च नासीति । सर्वानिन्द्रियकृतान् दोषान् वारयतीति तेन वरणा भवतीति ।

---

### இரண்டாவது கண்டம்

2.1 இந்த யாக்ஞவல்கியரை அத்ரி மஹரிஷி கேட்டதாவது — அளவு கடந்ததாகவும் வெளிப்படையாய்த் தோன்ருததாகவும் உள்ள இந்த ஆத்மா எனப்படுவது எதுவோ அதை நான் எவ்வாறு அறியக்கூடும்? அக்கேள்விக்கு யாக்ஞவல்கியர் கூறிய விடை பின் வருமாறு — அதற்கு அவிமுக்தம் என்பது உபாசிக்கப்பட வேண்டும், அளவு கடந்ததாகவும் வெளிப்படையாய்ந் தோன்ருததாகவும் உள்ள இந்த ஆத்மா எனப்படுவது எதுவோ அது அவிமுக்தத்தில் நிலை பெற்றுள்ளது என்று.

2.2 அந்த அவிமுக்தம் எங்கே நிலையாக உளது என்ருல் 'வரணு' விற்கும் 'நாசி'க்கும் மத்தியில் நிலையாயுளது என்பது விடை. அந்த 'வரணு' எது, அந்த 'நாசி' எது என்ருல் இந்திரியங்களெல்லாம் செய்யும் பாவங்களை (வாரயதி) தடுக்கிறது என்பதால் அது 'வரணு' ஆகிறது; நாசம் செய்வதால் 'நாசி'

## த்விதீய: கண்ட:

அதஹைநமத்ரி: பப்ரச்ச யாஜ்ஞவல்க்யம் ।
ய ஏஷோ ऽனந்தோ ऽவ்யக்த ஆத்மா
தம் கதமஹம் விஜாநீயாமிதி ।
ஸ ஹோவாச யாஜ்ஞவல்க்ய: । ஸோ ऽவிமுக்த
உபாஸ்யோ ய ஏஷோ ऽனந்தோ ऽவ்யக்த
ஆத்மா ஸோ ऽவிமுக்தே ப்ரதிஷ்ட்டித
இதி ॥ 2.1 ॥

ஸோ ऽவிமுக்த: கஸ்மின் ப்ரதிஷ்ட்டித இதி ।
வரணாயாம் நாஸ்யாஞ்ச மத்த்யே ப்ரதிஷ்ட்டித
இதி ।

கா வை வரணா கா ச நாஸீதி ।
ஸர்வானிந்த்ரியக்ருதான் தோஷான்
வாரயதீதி தேன வரணா பவதீதி ।

---

ஆகிறது. அதினுடைய ஸ்தானம் எது என்றால் புருவங்களும் நாசியும் கூடும் இடம் எதுவோ அது; அதுவே இந்த உலகிற்கும் மேலுலகிற்கும் ஸந்தியாகிய வானம் ஆகும். இந்த ஸந்தியையே பிரம்ம வித்துக்கள் ஸந்தியா வந்தனத்தில் உபாசிக்கின்றனர். அப்படிப் பட்ட அவிமுக்தம் உபாசிக்கப்படுதல் வேண்டும். எவர் இங்ஙனம் அதை அறிந்தவரோ அவரே அவிமுக்தத்தைப் பற்றிய ஞானத்தை உபதேசிப்பார்.

அவிமுக்தம் — விசுவநாதன உறையும் காசிக்ஷேத்ரம் வாராணஸீ என்றும் அவிமுக்தம் என்றும் கூறப்படும். அது எல்லாப் பாவங்களையும் போக்கும் க்ஷேத்ரம். அது நமது உடலில் புருவ மத்தியில் உளதாக அறிந்து தியானிக்க வேண்டும். அதுதான் ஞானிகளின் ஸந்தியாவந்தனம்.

सर्वानिन्द्रियकृतान् पापान्नाशयतीति तेन नासी भवतीति । कतमं चास्य स्थानं भवतीति । भ्रुवोर्घ्राणस्य च यः सन्धिः स एष द्यौर्लोकस्य परस्य च सन्धिर्भवतीति । एतद्वै सन्धिं सन्ध्यां ब्रह्मविद उपासत इति । सोऽविमुक्त उपास्य इति । सोऽविमुक्तं ज्ञानमाचष्टे यो वै तदेवं वेदेति ॥ २.२ ॥

## ॥ तृतीयः खण्डः ॥

अथ हैनं ब्रह्मचारिण ऊचुः ।किं जप्येनामृतत्वं ब्रूहीति । स होवाच याज्ञवल्क्यः । शतरुद्रीयेणेति । एतान्येव ह वा अमृतस्य नामधेयानि । एतै र्हवा अमृतो भवतीति ।

---

### மூன்ருவது கண்டம்

இவரை (யாக்ஞவல்கியரை) அவருடைய சீடர்களான பிரம்மசாரிகள் கேட்டதாவது:. எதை ஜபம் செய்வதால் ஒருவன் அம்ருதத்வம் அல்லது சாகாநிலை எனும் முக்திப் பதவியை எய்துவான் என்பதை உபதேசியுங்கள் என்று. யாக்ஞவல்கியர் கூறியதாவது: சதருத்ரீய ஜபத்தால் என்று. (ருத்ரத்தில் அடங்கிய நூற்றுக்கணக்கான சிவநாமங்களாகிய) இவையே சாகாத தன்மையின் நாமதேயங்கள். அவற்றை ஜபிப்பதாலேயே நிச்சயமாக ஒருவன் சாகாநிலை எய்திய முக்தனுவான்.

ஒப்பிடுக — ப்ருவோர் மத்த்யே ப்ராண- மாவேச்ய ஸம்யக் 'ஸ தம் பரம் புருஷமுபைதி திவ்யம் — கீதை: 8.10.

ஸர்வானிந்த்ரியக்ருதான் பாபாந்நாசயதீதி —
தேன நாஸீ பவதீதி ।

கதமஞ்சாஸ்ய ஸ்த்தானம் பவதீதி ।
ப்பருவோர்க்க்ராணஸ்ய ச ய: ஸந்த்தி:
ஸ ஏஷ த்யௌர் லோகஸ்ய பரஸ்ய ச ஸந்த்திர்ப்ப
வதீதி ।

ஏதத்வை ஸந்த்திம் ஸந்த்த்யாம் ப்ரஹ்மவித
உபாஸத இதி ।

ஸோऽவிமுக்த உபாஸ்ய இதி ।
ஸோ ऽவிமுக்தம் ஜ்ஞான - மாசஷ்டே யோ வை
ததேவம் வேதேதி ॥ 2.2 ॥

---

த்ருதீய: கண்ட:

அத ஹைநம் ப்ரஹ்மசாரிண ஊசு: ।
கிம் ஜப்யேனாம்ருதத்வம் ப்ரூஹீதி ।
ஸ ஹோவாச யாஜ்ஞவல்க்ய:। சதருத்ரீயேணேதி ।
ஏதான்யேவ ஹ வா அம்ருதஸ்ய நாமதேயானி ।
ஏதைர்ஹ வா அம்ருதோ பவதீதி ।

சதருத்ரீயம் — ஸ்ரீருத்ரம் 'ருத்ரோபநிஷத் என்றும் சத ருத்ரீயம் என்றும் சிறப்புப் பெயர்வாய்ந்தது. சிவ பஞ்சாக்ஷரீ மந்த்ரம் அதில் உள்ளது. யஜுர் வேதசாகைகள் நூற்றியொன்றிலும் வேறு பல வேத சாகைக்ளிலும் இது படிக்கப்படஉவதாலும், நூற்றுக் கணக்கான வடிவங்களில் ருத்ரன் இங்கு போற்றப்படுவதாலும் ஸ்ரீருத்ரம் 'சதருத்ரீயம்' எனப் பெயருடையதாகும்.

## ॥ चतुर्थः खण्डः ॥

अथ हैनं जनको वैदेहो याज्ञवल्क्य-मुपसमेत्योवाच भगवन् संन्यासं ब्रूहीति। स होवाच याज्ञवल्क्यो ब्रह्मचर्यं परिसमाप्य गृही भवेत् गृही भूत्वा वनी भवेत् वनी भूत्वा प्रव्रजेत् ।यदि वेतरथा ब्रह्मचर्यादेव प्रव्रजेद् गृहाद्वनाद्वा । अथ पुनरव्रती वा व्रती वा स्नातकोवाऽस्नातको वा उत्सन्ना-ग्निको वा यदहरेव विरजेत्तदहरेव प्रव्रजेत् ॥ ४.१ ॥ तद्धैके प्राजापत्यामेवेष्टिं कुर्वन्ति । तदु न तथा करोति त्रैधातवीयामेव कुर्यात् । एतयैव त्रयो धातवो यदुत सत्वं रजस्तम इति । 'अयं ते योनि-र्ऋत्विजो यतो जातः प्राणादरोचथाः । त जानन्नग्न आरोहाथा नो वर्धय रयिम् ॥'

---

### நாலாவது கண்டம்

4.1 விதேஹ நாட்டரசனுன ஜனகர் யாக்ஞவல்கியரை விநயத்துடன் அணுகிக் கூறியது:- பகவத்ஸவரூபியான குருநாதரே! ஸந்நியாஸ முறையைக் கூறியருளுங்கள் என்று. அதற்கு அந்த யாக்ஞவல்கியர் அளித்த விடை பின் வருமாறு.

பிரம்மசரியத்தை முடித்து கிருஹஸ்தாசிரமத்தைக் கைக்கொள்ளவேண்டும். கிருஹஸ்தாசிரமத்திலிருந்து பின் வானப் பிரஸ்தாசிரமம் ஏற்கவேண்டும். வானப் பிரஸ் தாசிரமத்திற்குப்பின் ஸந்நியாஸியாகலாம். (பிரம்மசரி யத்திலிருந்து ஸந்நியாஸியானுல்) வேத விரதங்களை முடித்தோ முடிக்காமலோ, ஸ்நாதகனு கியோ ஆகாமலோ, அக்னியாராதனம் செய்பவனுக வோ செய்யாதவனுகவோ் எந்தப் பகலில் வைராக்

## சதுர்த்த: கண்ட:

அதஹைனம் ஜனகோ வைதேஹோ யாஜ்ஞவல்க்ய
முபஸமேத்யோவாச பகவன் ஸந்ந்யாஸம்ப்ரூஹீதி।
ஸஹோவாச யாஜ்ஞவல்யோ ப்ரஹ்மசர்யம் பரிஸமாப்ய
க்ருஹீ பவேத் க்ருஹீ பூத்வா வநீ பவேத், வநீ பூத்வா பரவ்ரஜேத்।
யதிவேதரதா ப்ரஹ்மசர்யாதேவ ப்ரவ்ரஜேத் க்ருஹாத் வனாத்வா।
அத புன - ரவ்ரதீ வா வ்ரதீ வா ஸ்நாதகோ'வாS ஸ்நாதகோ வா உத்ஸந்நாக்னிகோ'வா யதஹரேவ விரஜேத்ததஹரேவ ப்ரவ்ரஜேத் ॥ 4.1 ॥
தத்தைகே ப்ராஜாபத்யாமேவேஷ்டிம் குர்வந்தி।
தது ந ததா கரோதி த்ரைதாதவீயாமேவ குர்யாத்।
ஏதயைவ த்ரயோ தாதவோ யதுத ஸத்வம் ரஜஸ்தம் இதி।

---

கியம் பிறந்ததோ அந்தப் பகலிலேயே ஸந்நியாஸியாகட்டும்.

4.2 சிலர் (ஸந்நியாஸ மேற்பதற்குமுன்) பிராஜபத்ய இஷ்டியைச் செய்கிறார்கள். அது அப்படிச் செய்ய வேண்டிய அவசியமில்லை. மூன்று மூலப் பொருள்களை தியாகம் செய்தால் போதும். மூன்று முலப் பொருள்கள் ஸத்வம், ரஜஸ், தமஸ் எனும் குணங்கள். (அவைகளைக்கடந்து குணாதீதனாக வேண்டும்.) அக்னியைப் பார்த்து 'எதிலிருந்து நீ உண்டானாயோ அந்தப் பிராணனே உன் பிறப்பிடம்; பிராணனாலேயே நீ பிரகாசிக்கிறாய்; அதை அறிந்து

इत्यनेन मन्त्रेण अग्निमाजिघ्रेत् । एष ह वा अग्नेर्योनिर्यः प्राणः प्राणं गच्छ स्वाहेत्येवमेवैतदाह ।। ४.२ ।।

ग्रामादग्निमाहृत्य पूर्ववदग्नि-माघ्रापयेत् । यदग्निं न विन्दे-दप्सु जहुयात् । आपो वै सर्वादेवताःसर्वाभ्यो देवताभ्यो जुहोमि स्वाहेति हुत्वोद्धृत्य प्राश्नीयात् साज्यं हविरनामयं मोक्ष मन्त्रस्त्रय्येवं वदेत् । एतद्ब्रह्म एतदुपासितव्यम् । एवमेतद्भगवन्निति वै याज्ञवल्क्य।।४.३।।

## ।। पंचमः खण्डः ।।

अथ हैनमत्रिः पप्रच्छ याज्ञवल्क्यम् । पृच्छामि त्वा याज्ञवल्क्य अयज्ञोपवीती कथं ब्राह्मण इति । स होवाच

---

அக்னியே! மேலே கிளம்பி பிராணனில புகுந்து விடு. எங்களுக்கு முக்திச்செல்வத்தைச் செழிக்கச் செய்' என்ற இந்த மந்திரத்தால் அக்னி சக்தியைப் பிராணவாயுவுடன் மூக்கின் வழி உள்ளே இழுத்துக் கொள்ளவும். எது பிராணனே அதுவே அக்னியின் பிறப்பிடம். ஆகையால் 'ப்ராணம் கச்ச ஸ்வாஹா' — பிராணனுக்குள் மறைந்து போ — என்று அதையே விரஜா ஹோமமாகக் கருதி மானசிக மாக ஸந்நியாஸம் ஏற்றுக் கொள்ளலாம் எனறு கூறினர்.

4.3 (ஜனங்கள் வசிக்கும்) கிராமத்திலிருந்து அக்னியைக் கொணர்ந்து மேற்கூறிய மந்திரத்தால் அக்னியில் நெய ஹோமம் செய்யவும். அக்னி (அருகாமையில்) கிடைக்கா விட்டால் ஜலத்தில் ஹோமத்தைச் செய்யலாம். ஜலமே எல்லா தேவதைகளின் ஸ்வரூபம். 'ஸர்வாப்ப்யோ

'அயம் தே யோநிர் ருத்விஜோ யதோ ஜாத:
ப்ராணுத்ரோசதா:।
த ஜாநந்நக்ன ஆரோஹாதா நோ வர்த்தத ரயிம்॥'
இத்யனேன மந்த்ரேண அக்னிமாஜிக்க்ரேத்।
ஏஷ ஹ வா அக்னேர் யோனிர் ய:ப்ராண:
ப்ராணம் கச்ச ஸ்வாஹேத் யேவமேவைததாஹ॥ 4.2 ॥
க்ராமா -தக்னி -மாஹ்ருத்ய பூர்வவதக்னி —
மாக்க்ராபயேத்।

பத் 'அக்னிம் நவிந்தே — தப்ஸு ஜுஹுயாத்।
ஆபோ வை ஸர்வா தேவதா: ஸர்வாப்ப்யோ
தேவதாப்ப்யோ ஜுஹோமி ஸ்வாஹேதி
ஹுத்வோத்த்ருத்ய ப்ராச்னீயாத் ஸாஜ்யம்
ஹவிரனுமயம் மோக்ஷ —மந்த்ரஸ்த்ரய்
யேவம் வதேத்।
ஏதத்ப்ரஹ்ம ஏத துப்பாஸிதவ்யம்।
ஏவமேதத் பகவன்னிதி வை யாஜ்ஞவல்க்ய ॥ 4.3 ॥

---

தேவதாப்ப்யோ ஜுஹோமி ஸ்வாஹா' என்று ஹோமம் செய்து எழுந்து எல்லா நோயையும் போக்கும் நெய் கலந்த அந்த மீதி ஹவிஸ்ஸை உட்கொள்ளவும். மோக்ஷ மந்திரத்தை — 'மயா ஸந்ந்யஸ்த:', 'மயா ஸந்ந்யஸ்த:', 'மயா ஸந்ந்யஸ்த:' என்று மூன்று தடவை சொல்லவும்.

இதுதான் பிரம்மம்; இதுதான் உபாசிக்க வேண்டியது என்று உபதேசம். 'பகவானே: யாக்ஞவல்கியரே: அது அங்ஙனம் என்பதை உணர்ந்து கொண்டேன' என்றூர் ஜனகர்.

याज्ञवल्क्यः । इदमेवास्य तद्यज्ञोपवीतं य आत्मा अपः प्राश्याचम्यायं विधिः परिव्राजकानाम् । वीराध्वने वा अनाशके वा अपां प्रवेशे वा अग्निप्रवेशे वा महाप्रस्थाने वा अथ परिव्राट् विवर्णवासा मुण्डोऽपरिग्रहः शुचिरद्रोही भैक्षणो ब्रह्मभूयाय भवतीति । यद्यातुरः स्यान्मनसा वाचा संन्यसेत् ।

एष पन्था ब्रह्मणा हानुवित्तस्तेनैति सन्यासी ब्रह्मविदित्येवमेवैष भगवन्याज्ञवल्क्य ॥ ५ ॥

---

### ஐந்தாவது கண்டம்

அத்ரி யாக்ஞவல்கியரைக் கேட்டதாவது:- யாக்ஞ வல்கியரே! உம்மைக் கேட்கிறேன், பிராம்மணன் எப்படி யக்ஞோபவீதம் இல்லாமலிருக்கலாம் என்று. அந்த யாக்ஞவல்கியர் கூறியதாவது (ஞானியானல) ஒருவனுக்கு ஆத்மா எதுவோ அது யக்ஞோபவீதம். (யக்ஞோப வீதத்தை விட்டு ஸந்நியாஸ மேற்கும் முறையைக் கூறுகிறேன்).

ஆபோசனம் செய்து பரிஸ்ராஜகனுவதற்கு இது விதி. வீரர்களான துறவிகள் சென்ற வழியைப் பின் பற்றி (வைராக்கியம் மேலிட்டவன்) பட்டினியிருந்தோ, ஜலத்தில் பிரவேசித்தோ, அக்னியில் பிரவேசித்தோ, மஹாப்ரஸ்த்தான யாத்திரையை மேற்கொண்டு உடல் விழும் வரை வடக்கு நோக்கிப் போய்க் கொண்டே இருந்தோ தேவையற்றுப்போன உடலை உகுத்து விடலாம். (உடலில் இருக்கும் வரை) பரிவ்ராஜகன் துவராடை உடுத்துத் தலையை மழித்து, உடைமை யேது மில்லாதவனுயும் பரிசுத்தனுயும் எவ்வுயிர்க்கும்

ததேவாக்னிஸ்ததாதித்யஸ்தத்வாயுஸ்தது
சந்த்ரமா: ।
ததேவ சுக்ரம் தத் ப்ரஹ்ம ததாபஸ்தத்
ப்ரஜாபதி: ॥ 4.2 ॥

த்வம் ஸ்த்ரீ த்வம் புமானஸி த்வம் குமார
உத வா குமாரீ ।
த்வம் ஜீர்ணோ தண்டேன வஞ்சஸி த்வம் ஜாதோ
பவஸி விச்வதோ முக: ॥ 4.3 ॥
நீல: பதங்கோ ஹரிதோ லோஹிதாக்ஷஸ்
தடித்கர்ப்ப ருதவ: ஸமுத்ரா: ।
அனாதிமத் த்வம் விபுத்வேன வர்த்தஸே
யதோ ஜாதானி புவனானி விச்வா ॥ 4.4 ॥

அஜாமேகாம் லோஹித-சுக்ல-க்ருஷ்ணாம்
பஹ்வீ: ப்ரஜா: ஸ்ருஜமானாம் ஸரூபா: ।
அஜோ ஹ்யேகோ ஜுஷமாணோऽனுசேதே
ஜஹாத்யேனாம் புக்த- போகாமஜோऽன்ய:॥ 4.5 ॥

---

வும், ஸமுத்திரங்களாகவும் நீயே விளங்குகிறாய். ஆதியற்றவனாய் எங்கும் நிறைந்தவனாய் நீ இருக்கிறாய். உன்னிடமிருந்தே எல்லா உலகங்களும் தோன்றி உள்ளன.

4.5 சிவப்பும் வெளுப்பும் கருப்பும் கலந்த வர்ணமுடையதாயும் தன்னைப் போன்ற உருக்கொண்ட பல குட்டிகளை உற்பத்தி செய்வதாயும் உள்ள (ப்ரக்ருதியாகிய) பெண் ஆடு ஒன்றை (புருஷனாகிய) ஆண் ஆடு ஒன்று கூடிக் கிடக்கின்றது. மற்றொரு ஆண் ஆடு (முக்த புருஷன்) போகங்களைக் கூடியனுபவித்த பெண் ஆட்டை விட்டு விலகுகின்றது.

द्वा सुपर्णा सयुजा सखाया समानं वृक्षं परिषस्वजाते ।
तयोरन्यः पिप्पलं स्वाद्वत्त्यनश्नन्नन्यो अभिचाकशीति
॥ ४.६ ॥

समो वृक्षे पुरुषो निमग्नोऽनीशया शोचति मुह्यमानः ।
जुष्टं यदा पश्यत्यन्यमीश-मस्य महिमानमिति वीतशोकः
॥ ४.७ ॥

ऋचो अक्षरे परमे व्योमन् यस्मिन् देवा अधिविश्वे निषेदुः ।
यस्तं न वेद किमृचा करिष्यति य इत्तद्विदुस्त इमे समासते
॥ ४.८ ॥

---

4.6 அழகிய சிறகுடைய பக்ஷிகள் இரண்டு இணை பிரியாதவை; ஸமான அந்தஸ்துடையவை: ஸமான மாக ஒரே விருக்ஷத்தை வாசஸ்தானமாயடைந்தவை. அவற்றுள் ஒன்று ருசியுள்ள பழத்தை உண்கிறது; மற்றதோ வெனின் உண்ணுமல் பார்த்துக் கொண்டு மாத்திரம் இருக்கிறது.

4.7 (இரண்டும்) ஸமான வாசஸ்தானமாக ஒரே விருக்ஷத்தை உடையதாயினும், ஒரு பக்ஷி (ஜீவன்) மதி மயங்கித் திறமையற்று சோகிக்கிறது. அது எப்போது ஏற்ற முள்ளதும், ஆளும் திறமை வாய்ந்ததுமான மற்றதைப்

---

4.5 'அஜ:' எனும் சொல் இங்கு சிலேடையாக உபயோகிக்கப் பட்டுள்ளது. அது பிறப்பற்ற ஆத்மாவையும் வெள்ளாட்டையும் குறிக்கும். சிவப்பும் வெளுப்பும் கருப்பும் பிரகிருதியின் முக்குணங்களாகிய ஸத்துவத்தையும் ரஜஸ்ஸையும் தமஸையும் குறிக்கும்.

'அஜோஹ்யேக:' — கட்டுப்பட்ட ஜீவன்
'அஜோऽன்ய:' — விடுபட்ட ஜீவன்

த்வா ஸுபர்ணு ஸ்யுஜா ஸகாயா ஸமானம்
· வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே ।
தயோரன்ய: பிப்பலம் ஸ்வாத்வத்த் —
யனச்னன்னன்யோ அபிசாகசீதி ।4.6॥
ஸமோ வ்ருக்ஷே புருஷோ நிமக்னோ ऽநீசயா
சோசதி முஹ்யமான: ।
ஜுஷ்டம் யதா பச்யத்யன்யமீச-மஸ்ய
மஹிமானமிதி வீதசோக: ।4.7॥
ருசோ அக்ஷரே பரமே வ்யோமன் யஸ்மின்
தேவா அதிவிச்வே நிஷேது: ।
யஸ்தந் ந வேத கிம்ருசா கரிஷ்யதி ய
இத்தத்விதுஸ் த இமே ஸமாஸதே ।4.8॥

---

பார்க்கிறதோ அப்போது அந்த மகிமை தன்னுடையதே என்று கண்டு சோகம் நீங்கியதாக ஆகிறது.

4.8 வேத மந்திரங்கள் அழிவற்ற பரமாகாசம் போன்ற எந்தப் பரம்பொருளில் உறைகின்றனவோ எல்லா தேவர்களும் எங்கு நிலை பெறுகிறுர்களோ, அந்தப் பரம் பொருளை எவன் அறியவில்லையோ அவன் வேத மந்திரங் களால் என்ன செய்யப் போகிறுன்? அதை அறிந்தவர்கள் எவர்களோ அவர்களே வாழ்க்கைப் பயனை அடைகின் றனர்.

---

4.6 ஒ.மு.உப. 3.1.1 - 3.1.2.
இரண்டு பக்ஷிகள் — ஜீவனும் ஈஸ்வரனும்.
ருசியுள்ள பழத்தை — கர்மத்தாலுண்டாகும் இன்ப துன்பங்களை. ருசியுள்ள பழத்தையே புசிக்கிறுன் என்று கருத்தல்ல; ருசியற்ற தாயினும் ருசியுள்ளதெனக் கருதிப் புசிக்கிறுன்.
விருக்ஷம் — சரீரம்.
ஒ. ருதம் பிபந்தௌ ஸுக்ருதஸ்ய லோகே ।— கட. உப. 3.1
4.8 ஒ. ருக்வேதம் — 1.164.139.

छन्दांसि यज्ञाः क्रतवो व्रतानि भूतं भव्यं यच्च वेदा वदन्ति ।
अस्मान् मायी सृजते विश्वमेतत्तस्मिंश्चान्ये मायया सन्निरुद्धः
॥ ४.९ ॥

मायां तु प्रकृतिं विद्यान्मायिनं तु महेश्वरम् ।
तस्यावयव-भूतैस्तु व्याप्तं सर्वमिदं जगत् ॥ ४.१० ॥
यो योनिं योनि-मधितिष्ठत्येको यस्मिन्निदं सं च विचैति सर्वम् ।
तमीशानं वरदं देवमीड्यं निचाय्येमां शान्तिमत्यन्तमेति
॥ ४.११ ॥

यो देवानां प्रभवश्चोद्भवश्च विश्वाधिपो रुद्रो महर्षिः ।
हिरण्यगर्भं पश्यत जायमानं स नो बुद्ध्या शुभया संयुनक्तु
॥ ४.१२ ॥

---

**4.9** வேதங்களும் யாகங்களும் கிரதுக்களும் விரதங்களும், சென்றதும், வருவதும், இன்னும் வேதங்கள் கூறுவது எதுவோ அதுவும் இவ்வுலகும் மாயைக்கு ஈசனுன இறைவனுல் சிருஷ்டிக்கப்படுகின்றன. நாமும் அங்ஙனமே. அந்த மாயையால் ஈசுவரனுக்கு வேருகத் தோன்றுபவன் (ஜீவன்) கட்டப்பட்டுள்ளான்.

**4.10** பிரகிருதியை மாயையாகவும், மஹேச்வரனை மாயையை ஆட்டி வைப்பவனுகவும் அறியவேண்டும். இவ்வுலகனைத்தும் அவனுடைய அவயவங்களைப் போன்ற உயிர்களால் நிரம்பியுளது.

**4.11** பிரகிருதியின் வடிவந்தோறும் எவன் ஒருவனே ஊடுருவி நிற்கின்ருனே, எவனிடம் இவ்வுலகு அனைத்தும் ஒன்றுபட்டும் வேறுபட்டும் விளங்குகிறதோ, ஆள்பவனுகவும், அளிப்பவனுகவும் போற்றுதற்குரியவனுக

சந்தாம்ஸி யஜ்ஞா: க்ரதவோ வ்ரதானி பூதம்
பவ்யம் யச்ச வேதா வதந்தி।
அஸ்மான் மாயீ ஸ்ருஜதே விச்வ மேதத் தஸ்மிம்ச்-
சான்யே மாயயா ஸந்நிருத்த: ॥ 4.9 ॥

மாயாம் து ப்ரக்ருதிம் வித்யான்-மாயினம் து
மஹேச்வரம்।
தஸ்யாவயவ - பூதைஸ்து வ்யாப்தம்
ஸர்வமிதம் ஜகத்॥ 4.10 ॥

யோ யோனிம் யோனி- மதி திஷ்டத்யேகோ
யஸ்மின்னிதம் ஸஞ்ச விசைதி ஸர்வம்।
தமீசானம் வரதம் தேவமீட்யம் நிசாய்யேமாம்
சாந்தி- மத்யந்தமேதி ॥ 4.10 ॥

யோ தேவானும் ப்ரபவச்சோத்பவச்ச
விச்வாதிபோ ருத்ரோ மஹர்ஷி:।
ஹிரண்யகர்ப்பம் பச்யத ஜாயமானம்
ஸ நோ புத்த்யா சுபயா ஸம்யுனக்து॥ 4.12 ॥

---

வும் உள்ள அந்த தேவனை அறிந்தே ஒருவன் அளவுகடந்த சாந்தியை எய்துகிறான்.

4.12 எவன் தேவர்களைச் சிருஷ்டிப்பவனோ, வளர்ப்பவனோ, உலகனைத்திற்கும் அதிபனோ, துன்பங்களைத் துடைக்கும் ருத்திரனோ, தீர்க்கதரிசியோ, ஹிரணியகர்ப்பன் பிறந்ததைப் பார்த்தவனோ அவன் நமக்குச் சிறந்த புத்தியின் கூட்டுறவை அளிக்கட்டும்.

---

4.12 ஒ. யோ தேவானும் ப்ரதமம் புரஸ்தாத்
விச்வாதியோ ருத்ரோ மஹர்ஷி:।
ஹிரண்யகர்ப்பம் பச்யத ஜாயமானம் ஸ நோ புத்தயா
சுபயா ஸம்யுனக்து ॥
— மஹாநாராயண உப. 12.3.

यो देवानामधिपो यस्मिल्लोका अधिश्रिताः ।
य ईशे अस्य द्विपदश्चतुष्पदः कस्मै देवाय हविषा विधेम
॥ ४.१३ ॥

सूक्ष्माति-सूक्ष्मं कलिलस्य मध्ये विश्वस्य स्रष्टार-मनेकरूपम् ।
विश्वस्यैकं परिवेष्टितारं ज्ञात्वा शिवं शान्तिमत्यन्तमेति
॥ ४.१४ ॥

स एव काले भुवनस्य गोप्ता विश्वाधिपः सर्वभूतेषु गूढः ।
यस्मिन् युक्ता ब्रह्मर्षयो देवताश्च तमेवं ज्ञात्वा मृत्युपाशांश्छिनत्ति
॥ ४.१५ ॥

घृतात्परं मण्डमिवाति सूक्ष्मं ज्ञात्वा शिवं सर्वभूतेषु गूढम् ।
विश्वस्यैकं परिवेष्टितारं ज्ञात्वा देवं मुच्यते सर्वपाशैः
॥ ४.१६ ॥

---

**4.13** எவன் தேவர்களுக்கு அதிபனோ, எவனிடம் உலகங்கள் நிலை பெறுகின்றனவோ, எவன் இங்குள்ள இருகால் பிராணிகளையும் நாலுகால் பிராணிகளையும் ஆளுகின்றானோ, அந்த ஆனந்த வடிவினனான தேவனுக்கு ஹவிஸ்ஸால் ஆராதனை செய்கிறோம்.

**4.14** அணுவுக்கணுவாயிருப்பவனும், கலக்கத்தினிடையில் உலகைச் சிருஷ்டிப்பவனும், அநேக வடிவடையவனும், உலகனைத்தையும் வியாபித்து நிற்கும் ஒருவனும்

---

**4.13** ஒ. ய ஆத்மா பலதர யஸ்ய விச்வம் உபாஸதே
ப்ரஸிஷம் யஸ்ய தேவா:।
யஸ்ய ச்சாயாऽம்ருதம் யஸ்ய ம்ருத்யு: கஸ்மை தேவாய
ஹவிஷா விதேம॥
ருக்வே. 10.121.2.

யோ தேவானுமதிபோ யஸ்மில்லோகா
அதிச்ரிதா: ।
ய ஈசே அஸ்ய த்விபதச் சதுஷ்பத: கஸ்மை
தேவாய ஹவிஷா விதேம ॥ 4.13 ॥
ஸூக்ஷ்மாதிஸூக்ஷ்மம் கலிலஸ்ய மத்யே விச்வஸ்ய
ஸ்ரஷ்டார - மனேக ரூபம் ।
விச்வஸ்யைகம் பரிவேஷ்டிதாரம் ஜ்ஞாத்வா
சிவம் சாந்தி- மத்யந்த- மேதி ॥ 4.14 ॥
ஸ ஏவ காலே புவனஸ்ய கோப்தா விச்வாதிப:
ஸர்வபூதேஷு கூட: ।
யஸ்மின் யுக்தா ப்ரஹ்மர்ஷயோ தேவதாச்ச
தமேவம் ஜ்ஞாத்வா ம்ருத்யுபாசாம்ச்சினத்தி ॥ 4.15 ॥
க்ருதாதபரம் மண்ட மிவாதி ஸூக்ஷ்மம்
ஜ்ஞாத்வா சிவம் ஸர்வ பூதேஷு கூடம் ।
விச்வஸ்யைகம் பரிவேஷ்டிதாரம் ஜ்ஞாத்வா
தேவம் முச்யதே ஸர்வபாசை: ॥ 4.16 ॥

---

ஆகிய சிவனை அறிந்து ஒருவன் அளவுகடந்த சாந்தியை எய்துகிறான்.

4.15 உரியகாலத்தில் உலகைக் காப்பவன் அவனே. எல்லா உயிர்களிலும் மறைந்து நின்று உலகையெல்லாம் ஆள்பவன் அவனே. பிரம்மரிஷிகளும் தேவதைகளும் அவனிடமே கூடி நிற்கின்றார்கள். அவனை இவ்வாறு அறிந்து ஒருவன் மரணபாசங்களை அறுத்து விடுகிறான்.

4.16 (பாலில்) நெய்யை விட ஸாரமாய் அதிஸூக்ஷ்மமாய் எல்லா உயிர்களிலும் மறைந்திருப்பவனும், மங்கள வடிவினனுமாகிய அவனை அறிந்து, உலகனைத்தையும் வியாபித்திருக்கும் ஒருவனாகிய அந்த தேவனை

एष देवो विश्वकर्मा महात्मा सदा जनानां हृदये सन्निविष्टः ।
हृदा मनीषा मनसाभिकलुप्तो य एतद् विदुरमृतास्ते भवन्ति
॥४.१७॥

यदाऽतमस्तन्न दिवा न रात्रिः न सन्नचासच्छिव एव केवलः ।
तदक्षरं तत् सवितुर्वरेण्यं प्रज्ञा च तस्मात् प्रसृता पुराणी
॥ ४.१८ ॥

नैन-मूर्ध्वं न तिर्यंचं न मध्ये परिजग्रभत् ।
न तस्य प्रतिमा अस्ति यस्य नाम महद्यशः ॥ ४.१९ ॥

न सन्दृशे तिष्ठति रूपमस्य न चक्षुषा पश्यति कश्चनैनम् ।
हृदा हृदिस्थं मनसा य एनमेवं विदुरमृतास्ते भवन्ति
॥ ४.२० ॥

---

அறிந்து — ஒருவன் எல்லாத்தளைகளினின்றும் விடுபடுகிறான்.

4.17 இந்த தேவன் எல்லாவற்றையும் செய்பவன், எங்கும் வியாபித்தவன், எப்போதும் ஜீவராசிகளின் இருதயத்தில் புகுந்துறைபவன். (அன்பினால்) இருதயத்திலும் (ஆராய்ச்சியால்) புத்தியிலும் (தியானத்தால்) மனதிலும் அடைதற்குரியவன். எவர்கள் இதை அறிந்தவர்களோ அவர்கள் சாவைக் கடந்தவர்களாகின்றார்கள்.

4.18 எப்போது இருள் (அவித்தை) நீங்கிற்றோ அப்போது பகலுமில்லை இரவுமில்லை, உளதுமில்லை இலதுமில்லை; கேவல சிவம் மட்டும் உளது. அது அழியாதது, (ஸகலத்தையும் சிருஷ்டிக்கும்) ஸவித்ரு தேவனுடைய சிறந்த அறிவும் ஆதியில் அதிலிருந்து தோன்றியதேயாம்.

---

4.14 கலிலஸ்ய மத்யே - கலக்கத்தினிடை- 'தம ஆஸீத் தமஸா கூடமக்ரே ப்ரகேதம்' என்றபடி இருள் இருளால் மூடப்பட்டாற் போலிருந்த நிலையில்.

ஏஷ தேவோ விச்வகர்மா மஹாத்மா ஸதா
ஜனானாம் ஹ்ருதயே ஸந்நிவிஷ்ட:।
ஹ்ருதா மனீஷா மனஸாபிக்லுப்தோ ய
ஏதத் விது -ரம்ருதாஸ்தே பவந்தி ॥ 4.17 ॥

யதாऽதமஸ் தந்ந திவா ந ராத்ரி: ந ஸந்நசாஸச்சிவ
ஏவ கேவல:।
ததக்ஷரம் தத் ஸவிதுர்வரேண்யம் ப்ரஜ்ஞா ச
தஸ்மாத் ப்ரஸ்ருதா புராணீ॥ 4.18 ॥

நைந- மூர்த்வம் ந திர்யஞ்சம் ந மத்யே பரிஜ்க்ரபத்।
ந தஸ்ய ப்ரதிமா அஸ்தி யஸ்ய நாம மஹத்யச:
॥ 4.19 ॥

ந ஸந்த்ருசே திஷ்டதி ரூபமஸ்ய ந சக்ஷுஷா
பச்யதி கச்சனைனம்।
ஹ்ருதா ஹ்ருதிஸ்தம் மனஸா ய ஏன-மேவம் விது-
ரம்ருதாஸ்தே பவந்தி ॥ 4.20 ॥

---

4.19 அவனை மேலேயோ குறுக்கேயோ நடுவேயோ பிடித்தவர் எவருமில்லை. அளவுகடந்த புகழ் எவனுடைய தெனப் பிரசித்தமோ அவனுக்கு (பிரதிமையும் உவமையும்) சமமும் எதுவுமில்லை.

4.20 அவனுடைய ரூபம் கண்ணெதிரில் நிற்பதில்லை. (எந்த இந்திரியத்திற்கும் எட்டுவதில்லை). எவனும் அவனைக் கண்ணால் காண்பதில்லை. உள்ளத்தில் உறையும் அவனை உள்ளத்தாலும் மனதாலும் எவர்கள் அறிகிறார் களோ அவர்கள் சாவைக் கடந்தவர்களாகின்றார்கள்.

---

1.19 ஒ. நைன- மூர்த்வம் ந திர்யஞ்சம் ந மத்யே பரிஜக்ரபத்।
ந தஸ்யேசே கச்சன தஸ்ய நாம மஹத்யச:॥
— மஹாநாராயண உப. 1.2.5.

अजात इत्येवं कश्चिद्भीरुः प्रपद्यते ।
रुद्र यत् ते दक्षिणं मुखं तेन मां पाहि नित्यम् ॥ ४.२१ ॥

मा नस्तोके तनये मा न आयुषि मा नो गोषु मा नो अश्वेषु रीरिषः ।

वीरान् मा नो रूद्र भामितो वधी-र्हविष्मन्तः सदमित् त्वा हवामहे
॥ ४.२२ ॥

## पंचमोऽध्यायः

द्वे अक्षरे ब्रह्मपरे त्वनन्ते विद्याविद्ये निहिते यत्र गूढे ।
क्षरं त्वविद्या ह्यमृतं तु विद्या विद्याविद्ये ईशते यस्तु सोऽन्यः
॥ ५.१ ॥

---

4.21 (பிறவிக்கடலுக்கு) பயந்த எவனோ ஒருவன் நீ பிறப்பில்லாதவன் என்று உன்னைச் சரணடைகிறான். ருத்திரனே! உன்னுடைய தெற்கு முகம் (தக்ஷிணாமூர்த்தி வடிவம்) எதுவோ அதனால் என்னை எப்போதும் காத்தருள்வாய்.
4.22 எங்களுடைய குழந்தைகளிடத்தும் புத்திரர்களிடத்தும் துன்பம் ஏற்பட வேண்டாம். எங்களுடைய ஆயுளில் குறை ஏற்பட வேண்டாம். எங்களுடைய பசுக்

---

4.20 ந ஸந்த்ருசே திஷ்டதி ரூபமஸ்ய ந சக்ஷுஷா. பச்யதி கச்சனைனம்।
ஹ்ருதா மனீஷா மனஸாபிக்லுப்தோ ய ஏதத் விது -
ரம்ருதாஸ்- தே பவந்தி॥
மஹாநாராயண உப. 1.3 — கட உப.6.9

4.21 தக்ஷிணம் முகம் — சிவனுக்கு முகங்கள் ஐந்து:- ஸத்யோஜாதம் (மேற்கு), வாமதேவம் (வடக்கு), அகோரம் (தெற்கு), தத்புருஷம் (கிழக்கு), ஈசானம் (மேல்நோக்கி). தெற்கு நோக்கியது தக்ஷிணாமூர்த்தி வடிவம்.

அஜாத இத்யேவம் கச்சித்பீரு: ப்ரபத்யதே।
ருத்ர யத்தே தக்ஷிணம் முகம் தேன மாம் பாஹி
நித்யம்॥ 4.21 ॥

மா நஸ்தோகே தனயே மா ந ஆயுஷி மா நோ
கோஷு மா நோ அச்வேஷு ரீரிஷ:।
வீரான் மா நோ ருத்ர பாமிதோ வதீர் -
ஹவிஷ்மந்த: ஸதமித் த்வா ஹவாமஹே॥
4.22 ॥

பஞ்சமோऽத்யாய:

த்வே அக்ஷரே ப்ரஹ்மபரே த்வனந்தே வித்யா
வித்யே நிஹிதே யத்ர கூடே।
க்ஷரம் த்வவித்யா ஹ்யம்ருதம் து வித்யா வித்யா
வித்யே ஈசதே யஸ்து ஸோऽன்ய :॥ 5.1 ॥

களிடம் துன்பம் ஏற்பட வேண்டாம். எங்களுடைய குதிரைகளிடம் துன்பம் விளைக்க வேண்டாம் கோபங் கொண்டு எங்களுடைய திறமைவாய்ந்த பணியாட்களை அழிக்க வேண்டாம். ஹவிஸ்ஸுகளுடன் கூடிவந்து உமக்கு நமஸ்காரத்துடன் பூஜை செய்வோம்.

ஐந்தாவது அத்தியாயம்

5.1 அறிவும் அறியாமையுமாகிய இரண்டும் அழிவற்றதும் அளவுகடந்ததும் மறைந்து நிற்பதுமான எந்த பரப்பிரம்மத்தினிடத்தில் வைக்கப்பட்டுளவோ, எது அறிவையும் அறியாமையையும் ஆளுகிறதோ அது (இவ்விரண்டினின்றும்) வேறானது. அறியாமை அழிவது, அறிவு அழியாதது.

---

4.22 ஒ. ஸ்ரீருத்ரம் அனு. 10

5.1ஒ. (அவித்யயா ம்ருத்யும் தீர்த்வா வித்யயாऽம்ருதமச்னுதே।) அவித்தையினால் சாவைத்தாண்டி வித்தையினால் சாகாத் தன்மையை எய்துகிறான். -ஈ.ச.உப. 11

यो योनिं योनिमधितिष्ठत्येको विश्वानि रूपाणि योनीश्च सर्वाः ।
ऋषिं प्रसूतं कपिलं यस्तमग्रे ज्ञानैर्बिभर्ति जायमानं च पश्येत्
॥ ५.२ ॥

एकैकं जालं बहुधा विकुर्वन्नस्मिन् क्षेत्रे संहरत्येष देवः ।
भूयः सृष्ट्वा पतयस्तथेशः सर्वाधिपत्यं कुरुते महात्मा
॥ ५.३ ॥

सर्वा दिशः ऊर्ध्व-मधश्च तिर्यक् प्रकाशयन् भ्राजते यद्वनड्
वान् ।
एवं स देवो भगवान् वरेण्यो योनिस्वभावा-नधितिष्ठत्येकः
॥ ५.४ ॥

यच्च स्वभावं पचति विश्वयोनिः पाच्यांश्च सर्वान् परिणामयेद्
यः ।
सर्वमेतद् विश्वमधितिष्ठत्येको गुणांश्च सर्वान् विनियोजयेद् यः
॥ ५.५ ॥

---

5.2 எவன் பிரகிருதியின் வடிவந்தோறும் ஊடுருவி நிற்கின்றானோ, எவன் எல்லா ரூபங்களையும், அவற்றின் பிறப்பிடங்களையும் ஆளுகின்றானோ, எவன் தீர்க்கதர்சியும், கபிலவர்ணனுமான ஹிரணிய கர்ப்பன் ஆதியில் பிறந்ததைப் பார்த்து அவனுக்கு ஞானத்தையளித்துக் காப்பாற்றுகிறானோ (அவனே அந்த பரப்பிரம்மம்).

5.3 ஒவ்வொரு வலையையும் பலவகைகளில் விரித்து இந்த மூலப் பிரகிருதியில் தேவதேவன் (அனைத்தையும்)

---

இங்கு அவித்தையாவது பயனில் பற்றுடன் செய்யப்படும் காம்ய கர்மம். வித்தையாவது தேவதைகளின் உபாஸனையும் யோகமார்க்கமும்.

யோ யோனிம் யோனி- மதிதிஷ்டத்யேகோ
விச்வானி ரூபாணியோனீச்ச ஸர்வா: ।
ருஷிம் ப்ரஸூதம் கபிலம் யஸ்தமக்ரே
ஜ்ஞானைர்பிபர்த்தி ஜாயமானஞ்ச பச்யேத்॥ 5.2 ॥
ஏகைகம் ஜாலம் பஹுதா விகுர்வன்- னஸ்மின்
க்ஷேத்ரே ஸம்ஹரத் யேஷ தேவ:।
பூய: ஸ்ருஷ்ட்வா பதயஸ்ததேச: ஸர்வாதிபத்யம்
குருதே மஹாத்மா॥ 5.3 ॥
ஸர்வா திச: ஊர்த்வ- மதச்ச திர்யக் ப்ரகாசயன்
ப்ராஜதே யத்வனட்வான்।
ஏவம் ஸ தேவோ பகவான் வரேண்யோ
யோனிஸ்வபாவா- னதிதிஷ்டத்யேக: ॥ 5.4 ॥
யச்ச ஸ்வபாவம் பசதி விச்வயோனி: பாச்யாம்ச்ச
ஸர்வான் பரிணமயேத் ய :।
ஸர்வமேதத் விச்வ மதிதிஷ்டத்யேகோ குணாம்ச்ச
ஸர்வான் விநியோஜயேத் ய :॥ 5.5 ॥

---

இழுத்துக் கொள்ளுகிறான். மீண்டும் பிரஜாபதிகளைச் சிருஷ்டித்து பரமாத்மாவான ஈசுவரன் அனைத்தையும் ஆட்சி புரிகிறான்.

5.4 எங்ஙனம் சூரியன் மேலும் கீழும் குறுக்கிலும் எல்லாதிசைகளையும் ஒளியால் நிரப்பிக் கொண்டு பிரகாசிக்கின்றானோ, அங்ஙனமே சிறந்த தேவனாகிய அந்த பகவான் ஒருவனாகவே (வேறு காரணம் வேண்டாது) தாமே காரணம் போல் தோன்றும் இவ்வனைத்திற்கும் மேலாக நின்று ஆட்சி புரிகிறான்.

---

5.3 க்ஷேத்ரம்- மூலப் பிரகிருதி.
5.4 ஒ. யதா ப்ரகாசயத்யேக: க்ருத்ஸ்னம் லோகமிமம் ரவி: ।
க்ஷேத்ரம் க்ஷேத்ரீ ததா க்ருத்ஸ்னம் ப்ரகாசயதி பாரத" — கீ 13.33

तद् वेदगुह्योपनिषत्सु गूढं तद् ब्रह्मा वेदते ब्रह्मयोनिम् ।
ये पूर्वं देवा ऋषयश्च तद्विदुस्ते तन्मया अमृता वै बभूवुः
॥ ५.६ ॥

गुणान्वयो यः फलकर्मकर्ता कृतस्य तस्यैव स चोपभोक्ता ।
स विश्वरूपस्त्रिगुण-स्त्रिवर्त्मा प्राणाधिपः संचरति स्वकर्मभिः
॥ ५.७ ॥

अंगुष्ठमात्रो रवितुल्यरूपः संकल्पाहंकार-समन्वतो यः ।
बुद्धेर्गुणेनात्मगुणेन चैव आराग्रमात्रोप्यपरोऽपि दृष्टः
॥ ५.८ ॥

वालाग्र-शत-भागस्य शतधा कल्पितस्य च ।
भागो जीवः स विज्ञेयः स चानन्त्याय कल्पते ॥ ५.९ ॥

5.5 எவன் அனைத்துலகிற்கும் மூலகாரணமாயிருந்து கொண்டு பிரகிருதியைச் சமைக்கிறானே, எவன் சமைத்த (உண்டாக்கிய) அனைத்தையும், பரிணாமத்தையடையச் செய்கிறானோ எவன் எல்லா குணங்களையும் ஏவுகிறானோ, (அவன்) இவ்வுலகனைத்தையும் மேலிருந்து ஒருவனாக ஆளுகிறான்.

5.6 அது வேதரகசியமான உபநிஷதங்களில் மறைந்துறைகிறது; வேதத்தினால் மட்டும் அறியக்கூடிய அதை பிரம்மா அறிகிறார்; ஆதிகாலத்தில் எந்த தேவர்களும் ரிஷிகளும் அதை அறிந்தார்களோ அவர்கள் அதன் மயமாகவே ஆகிச் சாகாதவர்களாயினர்.

5.7 குணவசப்பட்டவன் எவனோ அவன் பயனைக்கருதிச் செயல் புரிபவனாயும் அச்செயலின் பயனை அனுபவிப்பவனாயும் ஆகிறான். அவன் இந்திரியங்களை அடக்கியாள்பவனாயிருந்தாலும் கூட முக்குணங்களுக்கு வசப்பட்டுப் பல்வேறு உருவங்களைத் தாங்கித் தன் கருமங்களால் முவ்வகைப்பட்ட மார்க்கத்தில் உலவுகிறான்.

தத் வேத-குஹ்யோபநிஷத்ஸு கூடம் தத்
ப்ரஹ்மா வேததே ப்ரஹ்மயோனிம்।
யே பூர்வம் தேவா ருஷயச்ச தத்விதுஸ்-தே
தன்மயா அம்ருதா வை பபூவு : ॥ 5.6 ॥

குணன்வயோ ய: பலகர்மகர்த்தா க்ருதஸ்ய
தஸ்யைவ ஸ சோபபோக்தா।
ஸ விச்வரூபஸ்- த்ரிகுணஸ்-த்ரிவர்த்மா
ப்ராணாதிப : ஸஞ்சரதி ஸ்வகர்மபி : ॥ 5.7 ॥

அங்குஷ்டமாத்ரோ ரவிதுல்யரூப: ஸங்கல்பா
ஹங்கார- ஸமன்விதோ ய :।
புத்தேர் குணேனாத்ம-குணேன சைவ ஆராக்ர
மாத்ரோப்யபரோऽபி த்ருஷ்ட :॥ 5.8 ॥

வாலாக்ர- சதபாகஸ்ய சததா கல்பிதஸ்ய ச।
பாகோ ஜீவ: ஸ விஜ்ஞேய: ஸ சானந்த்யாய
கல்பதே॥ 5.9 ॥

---

5.8 ஆரத்தின் முனைபோல் ஸூக்ஷ்மமாயிருப்பினும், வேறானவன்போல் தோன்றும் ஜீவன் கட்டைவிரல் அளவினனாயும், ஸூரியனைப் போல் பிரகாசிப்பவனாயும், ஸங்கல்பத்துடனும் அஹங்காரத்துடனும் கூடினவனாயும், புத்தியின் குணத்துடனும் ஆத்மாவின் குணத்துடன் கூடினவனாயும்,. காணப்படுகிறான்.

5.9 ஒரு மயிரிழையின் நுனியை நூறுபாகமாக்கி அதை மறுபடி நூறுபாகமாக்கினால் எவ்வளவு ஸூக்ஷ்மமாயிருக்குமோ அப்படி ஸூக்ஷ்மமானவன் அந்த ஜீவன் என்று அறிய வேண்டும். அப்படி அறிபவன் அளவு கடந்தவனாவான்.

---

5.7 த்ரிவர்த்மா — முவ்வகைப்பட்ட மார்க்கமாவது தர்மம், அதர்மம், தர்மத்தையும் அத்ர்மத்தையும் கடந்த ஞானம்; அல்லது தேவயானம், பித்ருயானம், திர்யங்மார்க்கம் (கீழ்ப் பட்ட பிறவி)

नैव स्त्री न पुमानेष न चैवायं नपुंसकः ।
यद्यच्छरीर-मादत्ते तेन तेन स युज्यते ॥ ५.१० ॥

संकल्पन-स्पर्शन-दृष्टि-मोहै -र्ग्रासाम्बुवृष्ट्यात्म विवृद्धि जन्म ।
कर्मानुगान्यनुक्रमेण देही स्थानेषु रूपाण्यभिसम्प्रपद्यते
॥ ५.११ ॥

स्थूलानि सूक्ष्माणि बहूनि चैव रूपाणि देही स्वगुणै-र्वृणोति ।
क्रियागुणै-रात्मगुणैश्च तेषां संयोगहेतु-रपरोऽपि दृष्टः
॥ ५.१२ ॥

अनाद्यनन्तं कलिलस्य मध्ये विश्वस्य स्रष्टार- मनेकरूपम् ।
विश्वस्यैकं परिवेष्टितारं ज्ञात्वा देवं मुच्यते सर्वपाशैः
॥ ५.१३ ॥

---

**5.10** அவன் பெண்ணுமல்லன். ஆணுமல்லன்; அவன் அலியுமல்லன்; எந்தெந்த உடலை எடுத்துக் கொள்ளு கிருனே அத்துடன் அவன் ஒன்று பட்டு நிற்கிருன்.

**5.11** எண்ணுதல், தொடுதல், பார்த்தல், மயங்குதல் முதலியவைகளாலும் உணவாலும் பானத்தாலும் விருத்தியடையும் பிறவியையுடைய ஜீவன் கருமத்துக் கிணங்கியவாறு வெவ்வேறிடங்களில் வெவ்வேறு ரூபங்களை எடுத்துக் கொள்ளுகிருன்.

---

**5.9 ஒ.** நீவாரசூகவத்தன்வீ பீதா பாஸ்வத்யணூபமா।
தஸ்யா: சிகாயா மத்யே பரமாத்மா வ்யவஸ்தித:।
— நாராயணஸூக்தம்

**5.10 ஒ.** ஆணல்லன் பெண்ணல்லன் அலியுமல்லன் காணலு மாகான் உளனல்லன் இல்லையல்லன் பேணுங்கால் பேணுமுரு வாகுமல்லனுமாம் கோணை பெரிதுடைத்தெம் பெம்மானைக் கூறுதலே.
— நம்மாழ்வார்

நைவ ஸ்த்ரீ ந புமானேஷ ந சைவாயம் நபும்ஸக :।
யத்யச்சரீர- மாதத்தே தேன தேன ஸ யுஜ்யதே
||5.10||

ஸங்கல்பன- ஸ்பர்சன- த்ருஷ்டி- மோஹைர்-
க்ராஸாம்பு- வ்ருஷ்ட்யாத்ம- விவ்ருத்தி ஜன்ம।
கர்மானுகான்யனுக்ரமேண தேஹீ ஸ்தானேஷு
ரூபாண்யபி ஸம்ப்ரபத்யதே||5.11||

ஸ்தூலானி ஸூக்ஷ்மாணி பஹூனி சைவ ரூபாணி
தேஹீ ஸ்வகுணைர்- வ்ருணோதி ।
க்ரியாகுணை- ராத்ம குணைச்ச தேஷாம் ஸம்யோக-
ஹேது- ரபரோऽபி த்ருஷ்ட :||5.12||

அணுத்யனந்தம் கலிலஸ்ய மத்யே விச்வஸ்ய
ஸ்ரஷ்டார - மனேக- ரூபம் ।
விச்வஸ்யைகம் பரிவேஷ்டிதாரம் ஜ்ஞாத்வா
தேவம் முச்யதே ஸர்வபாசை : || 5.13 ||

---

5.12 பெரியதும் சிறியதுமான பல வடிவங்களை ஜீவன் தனக்கியல்பான குணங்களால் வேண்டியெடுத்துக் கொள்ளுகிறான். செயலின் குணங்களாலும் மனதின் குணங்களாலும் (இங்ஙனம் நிகழ்கிறது). அவற்றின் கூட்டுறவுக்குக் காரணம் வேறு ஏதோ ஒன்று உளது என்பதும் காணப்பட்டிருக்கிறது.

---

5.11 உணவாலும் பானத்தாலும் — உணவாலும் பானத்தாலும் உடல் வளர்வது போல் உணர்ச்சிகளாலும் செயல்களாலும் ஜீவனுடைய பிறவி வளர்கிறது.

5.12 ஒ. எப்போது ஜீவன் ஒரு சரீரத்தை அடைகிறானோ, எப்போது விட்டுக்கிளம்புகிறானோ அப்போது காற்றானது உறைவிடத்தினின்று வாஸனைகளைக் கவர்ந்து செல்வது போல் (முன் செய்த செயல்களின் வாஸனைகளை) கவர்ந்து கொண்டு செல்லுகிறான். கீ.15.8

காரணம் வேறு ஒன்று உளது — அக்காரணம் கடவுள். அவனின்றி ஓரணுவுமசையாது.

भावग्राह्य-मनीडाख्यं भावाभावकरं शिवम् ।
कलासर्गकरं देवं ये विदुस्ते जहुस्तनुम् ॥ ५.१४ ॥

षष्ठोऽध्याय:

स्वभावमेके कवयो वदन्ति कालं तथान्ये परिमुह्यमाना: ।
देवस्यैष महिमा तु लोके येनेदं भ्राम्यते ब्रह्मचक्रम्
॥ ६.१ ॥

येनावृतं नित्यमिदं हि सर्वं ज्ञ: कालकारो गुणी सर्वविद् य: ।
तेनेशितं कर्म विवर्ततेह पृथिव्यप्तेजोऽनिलखानि चिन्त्यम्
॥ ६.२ ॥

---

**5.13** அடியும் முடியுமில்லாதவனும், அனேக வடிவுடையவனும், அவித்தையினிடையில் அனைத்துலகையும் சிருஷ்டிப்பவனும், அனைத்துலகையும் ஒருவனாக வியாபித்திருப்பவனும் ஆகிய தேவனை அறிந்து ஒருவன் எல்லாக் கட்டுகளினின்றும் விடுபடுகிறான்.

**5.14** கூடில்லாதவனென்று கூறப்படுபவனும், (பரிசுத்த) பாவனையால் பற்றப்படுபவனும், உருவுடையதையும் உருவில்லாததையும் சிருஷ்டிப்பவனும், மங்கள ஸ்வரூபியும், கலைகளை உற்பத்தி செய்பவனும் ஆகிய தேவனை எவர்கள் அறிகிறார்களோ அவர்கள் உடலை உதிர்த்து விடுகின்றனர்.

ஆறாவது அத்தியாயம்

**6.1** எதனால் இந்தப் பெரிய சக்கரம் சுழற்றப் படுகிறதோ அது இயற்கை என்று சில அறிஞர்களும், அவ்

---

நீடம் — கூடு அதாவது உடல்.

பாவக்ராஹ்ய - மனீடாக்யம் பாவாபாவகரம் சிவம் ।
கலாஸர்க்ககரம் தேவம் யே விதுஸ் தே
ஜஹுஸ்-தனும் ॥ 5.14 ॥

ஷஷ்டோऽத்யாய:

ஸ்வபாவமேகே கவயோ வதந்தி காலம் ததான்யே
பரிமுஹ்யமானா: ।
தேவஸ்யைஷ மஹிமா து லோகே யேனேதம்
ப்ராம்யதே ப்ரஹ்மசக்ரம் ॥ 6.1 ॥

யேனாவ்ருதம் நித்ய-மிதம் ஹி ஸர்வம் ஜ்ஞ:
காலகாரோ குணீ ஸர்வவித் ய: ।
தேனேசிதம் கர்ம விவர்த்ததேஹ ப்ருதிவ்யப் தே
ஜோனில கானி சிந்த்யம் ॥ 6.2 ॥

---

வாறே காலம் என்று பிறரும் மதிமயங்கியவர்களாய்க் கூறுகின்றனர். உலகில் இதுவெல்லாம் தெய்வத்தின் மகிமையேயாம்.

6.2 எவனால் இது எல்லாம் எப்போதும் வியாபிக்கப் பட்டுள்ளதோ, எவன் அறிவுமயமானவனோ, காலத்தையும் சிருஷ்டிப்பனோ, குணங்களுக்கீசனோ, எல்லாமறிந்தவனோ, அவனால் ஏவப்பெற்றே கிரியா சக்தியானது பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் எனத் தோன்றுகிறதென்று சிந்தித்துணர வேண்டும்.

---

6.1 அறிஞர்களாயிருந்தும் தெய்வத்தை ஒப்புக் கொள்ளாமை மதிமயக்கம். சக்கரம் — 1.4 பார்க்க

6.2 விவர்த்ததே — உண்மையில் மாறுதலில்லாமல் மாறுவதாய்த் தோன்றுகிறது.

तत्कर्म कृत्वा विनिवर्त्य भूयस्तत्वस्य तत्वेन समेत्य योगम् ।
एकेन द्वाभ्यां त्रिभिरष्टभिर्वा कालेन चैवात्मगुणैश्च सूक्ष्मैः
॥ ६.३ ॥

आरभ्य कर्माणि गुणान्वितानि भावांश्च सर्वान् विनियोजयेद्यः ।
तेषामभावे कृतकर्मनाशः कर्मक्षये याति स तत्वतोऽन्यः
॥ ६.४ ॥

आदिः स संयोगनिमित्तहेतुः परस्त्रिकाला-दकलोऽपि दृष्टः ।
तं विश्वरूपं भवभूतमीड्यं देवं स्वचित्तस्थमुपास्य पूर्वम्
॥ ६.५ ॥

---

**6.3** ஈசுவரார்ப்பணமாகக் கர்மத்தைச் செய்து அதனால் (கர்மத்தினின்று) ஒழிவடைந்து, தத்வத்தால் யோகத்தைக் கைக் கொண்டு, ஒன்ருலோ, இரண்டாலோ மூன்

---

**6.3** 'தத்கர்ம க்ருத்வாவிநிவர்த்ய' என்பது ஈசுவரன் சிருஷ்டி காரியத்தைச் எசய்தபின் அதனின்று விலகிப் பற்றின்றி நிற்பதைக் குறிப்பதாயும் சிலரால் கொள்ளப்படுகிறது.

தத்வத்தின் தத்வத்தால்:- முதல் தத்வம், பஞ்ச பூதங்கள், மனம், புத்தி, அஹங்காரம் அவ்யக்தம் ஐந்து கர்மேந்திரியங்கள், ஐந்து ஞானேந்திரியங்கள், சப்தம் முதலிய ஐந்து விஷயங்கள் ஆகிய 24 தத்துவங்களைக் குறிக்கும். இரண்டாவது தத்வம் 'தத்வமஸி' மஹா வாக்கியம் உபதேசிக்கும் ஞானம் — 24 தத்வங்களும் பிரம்மமே எனக் காணும் அறிவு. 'அதுவானுல் அதுவாவர் அதுவே சொல்லும்.'

ஒன்ருலோ, இரண்டாலோ, மூன்ருலோ, எட்டாலோ — ஒன்று மனம், இரண்டு மனமும் புத்தியும், மூன்று மனம், புத்தி, அஹங்காரம்; எட்டு — பஞ்சபூதங்களும் மனம் புத்தி அஹங்காரமும் சேர்ந்த அபராப்ரக்ருதி.

ஆத்மகுணங்களும் எட்டு,

தத் கர்ம க்ருத்வா விநிவர்தய பூயஸ்- தத்வஸ்ய
தத்வேன ஸமேத்ய யோகம் ।
ஏகேன த்வாப்யாம் த்ரிபிரஷ்டபிர்வா காலேன
சைவாத்ம குணைச்ச ஸூக்ஷ்மை : ॥ 6.3 ॥

ஆரப்ய கர்மாணி குணான்விதானி பாவாம்ச்ச
ஸர்வான் விநியோஜயேத் ய:।
தேஷா- மபாவே
க்ருத கர்மநாச : கர்மக்ஷயே யாதி ஸ தத்வதோ-
Sன்ய: ॥ 6.4 ॥

ஆதி: ஸ ஸம்யோக-நிமித்தஹேது:
பரஸ்த்ரிகாலா- தகலோ Sபி த்ருஷ்ட :।
தம் விச்வரூபம் பவபூத- மீட்யம் தேவம் ஸ்வசித்-
தஸ்த- முபாஸ்ய பூர்வம் ॥ 6.5 ॥

---

ருலோ, எட்டாலோ, நுட்பமான ஆத்ம குணங்களால் நாளடைவில் (ஒருவன் முக்தி எய்துகிருன்).

6.4 குணங்களுடன் கூடிய கர்மங்களை ஆரம்பித்து, எல்லா பாவனைகளையும் எவன் (பரம்பொருளிடமே) ஸமர்ப்பிக்கின்ருனோ அவன் பாவனைகளற்ற நிலையில், செய்த கர்மங்கள் அழியப் பெற்றவனுகிருன். கர்மங்கள் அழிந்ததும் அவன் உண்மை நிலையில் தனித்து நிற்கும் வேருெருவன் ஆகிருன்.

6.5 உலகனைத்தையும் தனதுருவாய்க் கொண்டவனும், உயிர்களுக்கு மூலகாரணனும், போற்றுதற்குரியவனும் ஆகிய தேவனை முதலில் தனது சித்தத்தில் உபாசித்தால், ஆதியும் (உடலையும் உயிரையும்) கூட்டுவிப்பதற்கு நிமித்த காரணனும், முக்காலத்திற்கப்பாலாகியவனுமாகிய ஈசன் கலைகள் (பகுதிகள்) அற்றவனுயினும் காணப்படுகிருன்.

स वृक्षकालाकृतिभिः परोऽन्यो यस्मात् प्रपञ्चः परिवर्ततेऽयम् ।
धर्मावहं पापनुदं भगेशं ज्ञात्वात्मस्थं अमृतं विश्वधाम
॥ ६.६ ॥

तमीश्वराणां परमं महेश्वरं तं देवतानां परमं च दैवतम् ।
पतिं पतीनां परमं परस्ताद् विदाम देवं भुवनेशमीड्यम्
॥ ६.७ ॥

न तस्य कार्यं करणं च विद्यते न तत्समश्चाभ्यधिकश्च दृश्यते ।
परास्य शक्तिर्विविधैव श्रूयते स्वाभाविकी ज्ञानबलक्रिया च
॥ ६.८ ॥

---

6.6 அவ்வீசன் விருக்ஷம் போல் வளரும் ஸம்ஸாரத்தை யும், காலத்தையும், உருவத்தையும் கடந்து தனியாய் நிற்பவன். அவனிடமிருந்தே இந்தப்பிரபஞ்சம் தோன் றிச் சுழல்கிறது. தருமத்தையளிப்பவனும், பாவத்தைப் போக்குபவனும், பெருமைகளுக் கீசனும் அழிவற்றவ னும், உலகிற்குறைவிடமும் ஆகிய அவனை உள்ளத்தில் உறைபவனையறிந்து (ஒருவன் முக்தி எய்துகிறான்).

6.7 ஈசுவரர்களுக் கெல்லாம் மேலான மஹேசுவரனும், தேவதைகளுக்கெல்லாம் மேலான தெய்வமும், தலைவர் களுக் கெல்லாம் மேலான தலைவனும், போற்றுதற்குரிய

---

6.6 வ்ருக்ஷம் போல் வளரும் ஸம்ஸாரம் —
ஒ. மேலே வேருள்ளதும் கீழே கிளையுள்ளதுமான அசுவத்த மரமாக முடிவற்றதாய்த் தோன்றும் ஸம்ஸாரம் வர்ணிக்கப்ப டுகிறது.

— கீ 15.1

ஸ வ்ருக்ஷகாலாக்ருதிபி: பரோSன்யோ யஸ்மாத்-
ப்ரபஞ்ச: பரிவர்த்ததே Sயம் ।
தர்மாவஹம் பாபநுதம் பகேசம் ஜ்ஞாத்வாத்
மஸ்தம் அம்ருதம் விச்வதாம ॥ 6.6 ॥

தமீச்வராணும் பரமம் மஹேச்வரம் தம்
தேவதானும் பரமஞ்ச தைவதம் ।
பதிம் பதீனும் பரமம் பரஸ்தாத் விதாம
தேவம் புவனேசமீட்யம் ॥ 6.7 ॥

ந தஸ்ய கார்யம் கரணஞ்ச வித்யதே ந
தத்ஸமச்சாப்யதிகச்ச த்ருச்யதே ।
பராஸ்ய சக்திர் விவிதைவ ச்ரூயதே ஸ்வாபாவிகீ
ஜ்ஞானபல- க்ரியா ச ॥ 6.8 ॥

---

உலக நாயகனும், அனைத்திற்கும் மேலானவனுமாகிய அந்த தேவனை நாம் அறியக் கடவோம்.

6.8 அவனுக்குக் காரியமுமில்லை கரணமுமில்லை. அவனுக்குச் சமமானவனோ மேலானவனோ காணப்படவில்லை. அவனுடைய சிறந்த சக்தியும் இயற்கையான ஞானமும் பலமும் செயலும் வெகுவாக வேதங்களில் கூறப்படுகின்றது.

---

6.7 எல்லாவற்றையும் கடந்து தனியாய் நிற்கும் இறைவன் அனைத்தினுள்ளும் உறைகிறான் என்று இம்மந்திரம் கூறுகிறது.

---

6.8 ஒ. ந தஸ்ய ப்ரதிமா அஸ்தி யஸ்ய
நாம மஹத்யச: । — மஹாநாராயண உப. 1.2.5

ந த்வத் ஸமோஸ்த்யப்யதிக: குதோன்யோ
லோகத்ரயேப்யப்ரதிம-பரபாவ ॥ — கீ. 11.43

न तस्य कश्चित्पतिरस्ति लोके न चेशिता नैव च तस्य लिंगम् ।
स कारणं करणाधिचाधिपो न चास्य कश्चिज्जनिता न चाधिपः
॥ ६.९ ॥

यस्तन्तुनाभ इव तन्तुभिः प्रधानजैः स्वभावतः ।
देव एकः स्वमावृणोति स नो दधातु ब्रह्माप्ययम्
॥ ६.१० ॥

एको देवः सर्वभूतेषु गूढः सर्वव्यापी सर्वभूतान्तरात्मा ।
कर्माध्यक्षः सर्वभूताधिवासः साक्षी चेता केवलो निर्गुणश्च
॥ ६.११ ॥

एको वशी निष्क्रियाणां बहूनामेकं बीजं बहुधा यः करोति ।
तमात्मस्थं येऽनुपश्यन्ति धीरास्तेषां सुखं शाश्वतं नेतरेषाम्
॥ ६.१२ ॥

---

**6.9** அவனுக்குத் தலைவனுக உலகில் எவனும் இல்லை; அவனை ஆள்பவனும் இல்லை; அவனுக்குக் குறியுமில்லை. அவனே (அனைத்திற்கும்) காரணம். கரணங்களுக்கதிபனுன ஜீவனுக்கு அவனே அதிபன். அவனுக்குத் தந்தையு மில்லை, அதிபனுமில்லை.

**6.10** சிலந்திப்பூச்சி அல்லது பட்டுப் பூச்சி தனது நூல்களால் தன்னை மறைத்துக் கொள்வதுபோல் இயற்கை யாகவே பிரகிருதியில் தோன்றும் பொருள்களால் எந்த தேவன் தானொருவனுகவே தன்னை மறைத்துக் கொள்ளு கிருனே அவன் நமக்கு பிரம்ம ஸாயுஜ்யத்தை அளிக் கட்டும்.

ந தஸ்ய கச்சித் பதிரஸ்தி லோகே ந சேசிதா
நைவ ச தஸ்ய லிங்கம் ।
ஸ காரணம் கரணாதிபாதிபோ
ந சாஸ்ய கச்சிஜ்ஜனிதா ந சாதிப: ॥ 6.9 ॥

யஸ்தந்துநாப இவ தந்துபி: ப்ரதானஜை:
ஸ்வபாவத: ।
தேவ ஏக: ஸ்வமாவ்ருணோதி
ஸ நோ ததாது ப்ரஹ்மாப்யயம் ॥ 6.10 ॥

ஏகோ தேவ: ஸர்வபூதேஷு கூட: ஸர்வவ்யாபீ
ஸர்வபூதாந்தராத்மா ।
காமாத்யக்ஷ: ஸர்வ பூதாதிவாஸ: ஸாக்ஷீ சேதா
கேவலோ நிர்க்குணச்ச ॥ 6.11॥

ஏகோ வசீ நிஷ்க்ரியாணாம் பஹூனா —
மேகம் பீஜம் பஹுதா ய: கரோதி ।
தமாத்மஸ்தம் யேऽனுபச்யந்தி தீராஸ் தேஷாம்
ஸுகம் சாச்வதம் நேதரேஷாம் ॥ 6.12॥

---

**6.11** ஒருவனேயாகிய தேவன் எல்லா உயிர்களிலும் மறைந்துறைகிறான்; அவன் எங்கும் வியாபித்தவன்; எல்லா உயிர்களுக்கும் அந்தராத்மா; எல்லாச் செயல்களையும் மேல்பார்ப்பவனாயும் எல்லா உயிர்களுக்கும் வாசஸ்தான மாயும் அவன் உளன்; அவன் ஸாக்ஷி, அறிவு வடிவினன், தனித்திருப்பவன் குணங்களால் பற்றப்படாதவன்.

**6.12** (தாமே இயங்கமாட்டாது) செயலற்றிருக்கும் பலவற்றையும் தன் வசங்கொண்டுள்ள எந்த ஒருவன் வித்தாகிய (பிரகிருதி எனும்) ஒன்றை பலவாய்ச் செய்கின்றானோ, அவனைத் தங்களிடம் உறைபவனாய் எந்த

---

6.11-13 ஒ. கட. உப. 5.12-13.

नित्यो नित्यानां चेतनश्चेतनानामेको बहूनां यो
विदधाति कामान् ।
तत्कारणं सांख्ययोगाधिगम्यं ज्ञात्वा देवं मुच्यते सर्वपाशैः
॥ ६.१३ ॥

न तत्र सूर्यो भाति न चन्द्रतारकं नेमा विद्युतो भान्ति
कुतोऽयमग्निः ।
तमेव भान्त-मनुभाति सर्वं तस्य भासा सर्वमिदं विभाति
॥ ६.१४ ॥

एको हंसो भुवनस्यास्य मध्ये स एवाग्निः सलिले सन्निविष्टः ।
तमेव विदित्वा अतिमृत्युमेति नान्यः पन्था विद्यतेऽयनाय
॥ ६.१५ ॥

स विश्वकृद् विश्वविदात्मयोनि-र्ज्ञः कालकालो गुणी
सर्वविद्यः ।
प्रधान क्षेत्रज्ञ-पति-र्गुणेशः संसारमोक्षस्थिति-बन्धहेतुः
॥ ६.१६ ॥

---

தீரர்கள் ஆழ்ந்து காண்கிறார்களோ அவர்களுக்கே அழி வில்லாத இன்பமுண்டு, பிறர்க்கில்லை.

6.13 நிலையுள்ள பொருள்களிடை நிலையுள்ளவனாயும், அறிவுள்ள உயிர்களின் அறிவாயும், ஒருவனாய் நின்று அனைவருடைய ஆசைகளையும் அளிப்பவனாயும், அனைத் திற்கும் காரணமாயும், ஞான யோகத்தால் அடைதற்குரிய வனாயும் உள்ள அந்த தேவனை அறிந்து ஒருவன் எல்லாத் தளைகளினின்றும் விடுபடுகிறான்.

---

6.14 ஒ.கட.உப. 5.15.

நித்யோ நித்யானாஞ் சேதனச்சேதனானா
மேகோ பஹூனாம் யோ விததாதி காமான் ।
தத்காரணம் ஸாங்க்யயோகாதிகம்யம்
ஜ்ஞாத்வா தேவம் முச்யதே ஸர்வ பாசை: ॥ 6.13॥

ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ர தாரகம் நேமா
வித்யுதோ பாந்தி குதோऽயமக்னி: ।
தமேவ பாந்த-மனுபாதி ஸர்வம் தஸ்ய பாஸா
ஸர்வமிதம் விபாதி ॥ 6.14॥

ஏகோ ஹம்ஸோ புவனஸ்யாஸ்ய மத்யே
ஸ ஏவாக்னி: ஸலிலே ஸந்நிவிஷ்ட: ।
தமேவ விதித்வா அதிம்ருத்யு-மேதி நான்ய:
பந்தா வித்யதே ऽயனாய ॥ 6.15॥

ஸ விச்வக்ருத் விச்வவிதாத்மயோனிர்-ஜ்ஞ:
காலகாலோ குணீ ஸர்வவித் ய: । ப்ரதான
க்ஷேத்ரஜ்ஞ-பதிர்-குணேச: ஸம்ஸாரமோக்ஷ-
ஸ்திதி-பந்தஹேது: ॥ 6.16॥

---

6.14 அங்கே சூரியன் பிரகாசிப்பதில்லை, சந்திரனும் நக்ஷத்திரங்களும் (பிரகாசிப்பதில்லை); மின்னல் கொடிகளும் பிரகாசிப்பதில்லை; இந்த அக்கினி எங்ஙனம்(பிரகாசிக்கும்)? ஸ்வயம் பிரகாசமுள்ள அவனைப் பின்பற்றியே அனைத்தும் பிரகாசிக்கின்றது; அவனொளியாலேயே இவை யனைத்தும் விளங்குகின்றது.

6.15 இவ்வுலகின் நடுவில் உள்ளவன் ஹம்ஸன் (பரமாத்மா) ஒருவனே. அவனே அக்கினியாக நீரினுள் புகுந்துறைபவன் அவனை அறிந்தே ஒருவன் சாவைக் கடந்து செல்லுகிறான். விடுதலைக்கு வேறுவழியில்லை.

स तन्मयो ह्यमृत ईशसंस्थो ज्ञः सर्वगो भुवनस्यास्य गोप्ता ।
य ईशेऽस्य जगतो नित्यमेव नान्यो हेतुर्विद्यत ईशनाय
॥ ६.१७ ॥

यो ब्रह्माणं विदधाति पूर्वं यो वै वेदांश्च प्रहिणोति तस्मै ।
तं ह देव-मात्मबुद्धि प्रकाशं मुमुक्षुर्वै शरणमहं प्रपद्ये
॥ ६.१८ ॥

निष्कलं निष्क्रियं शान्तं निरवद्यं निरंजनम् ।
अमृतस्य परं सेतुं दग्धेन्धनमिवानलम् ॥ ६.१९ ॥

यदा चर्मवदाकाशं वेष्टयिष्यन्ति मानवाः ।
तदा देवमविज्ञाय दुःखस्यान्तो भविष्यति ॥ ६.२० ॥

**6.16** அவனே உலகைச் சிருஷ்டிப்பவன், உலகை அறிபவன், தன்க்குத்தானே மூலமாகியவன், அறிவு வடிவினன், காலத்தையும் விழுங்குபவன், நற்குணங்களுக்குறைவிடம், அனைத்தையும் அறிபவன், க்ஷேத்திரத்திற்கும் க்ஷேத்திரக்ஞனுக்கும் (உடலுக்கும் உயிருக்கும்) தலைவன், முக்குணங்களுக்கு நாயகன், ஸம்ஸாரத்தினின்று விடுதலைக்கும், ஸம்ஸாரம் நிலைப்பதால் ஏற்படும் பந்தத்திற்கும் காரணமாகியவன்.

**6.17** அவன் தான் தானேயாகியிருப்பவன், அழிவில்லாதவன், ஆட்சியில் நிலைத்தவன், அறிவு வடிவினன், எங்கும் நிறைந்தவன், இவ்வுலகைக் காப்பவன், இவ்வுலகிற்கு நிலையான இறைவன்; அவனைத் தவிர ஆள்வதற்குக் காரணம் வேறு இல்லை.

**6.18** ஆதியில் ப்ரம்மாவைப் ப்டைத்து அவனுக்கு வேதங்களைக் கொடுத்தருளியவன் எவனோ, (நமக்குள்ளி

ஸ தன்மயோ ஹ்யம்ருத ஈசஸமஸ்தோ ஜ்ஞ:
ஸர்வகோ புவனஸ்யாஸ்ய கோப்தா ।
ய ஈசேऽஸ்ய ஜகதோ நித்யமேவ நான்யோ
ஹேதுர்வித்யத ஈசனுய ॥ 6.17॥

யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோ வை
வேதாம்ச்ச ப்ரஹிணோதி தஸ்மை ।
தம் ஹ தேவ-மாத்ம-புத்திப்ரகாசம் முமுக்ஷுர்வை
ச்ரணமஹம் ப்ரபத்யே ॥ 6.18॥

நிஷ்கலம் நிஷ்க்ரியம் சாந்தம் நிரவத்யம்
நிரஞ்ஜனம் ।
அம்ருதஸ்ய பரம் ஸேதும் தக்தேந்தன-
மிவானலம் ॥ 6.19॥

யதா சர்மவதாகாசம் வேஷ்டயிஷ்யந்தி
மானவா: ।
ததா தேவ-மவிஜ்ஞாய து:க்கஸ் யாந்தோ
பவிஷ்யதி ॥ 6.20॥

---

ருந்து) நமது புத்தியைப் பிரகாசிக்கச் செய்பவன் எவனே, அந்த தேவனை மோக்ஷத்தில் விருப்பமுடைய நான் சரணமடைகின்றேன்.

6.19 பின்னமற்றவனும், செயலற்றவனும், அமைதி நிறைந்தவனும், குற்றமற்றவனும், அழுக்கற்றவனும், அழியா நிலைக்குச் சிறந்த பாலம் போன்றவனும், விறகை எரித்தோய்ந்த தீ போன்றவனுமான (தேவனை மோக்ஷத்தில் விருப்பமுடைய நான் சரணடைகின்றேன்).

6.20 எப்போது ஒரு தோலைப் போல் மனிதர்கள் ஆகாயத்தைச் சுருட்டக் கூடுமோ அப்போது தெய்வத்தை அறியாமல் ஒருவனுக்கு துன்பத்தின் முடிவு ஏற்படும்.

तपः प्रभावाद् देवप्रसादाच्च ब्रह्म ह श्वेताश्वतरोऽथ विद्वान् ।
अत्याश्रमिभ्यः परमं पवित्रं प्रोवाच सम्यगृषिसंघजुष्टम् ।
॥ ६.२१ ॥

वेदान्ते परमं गुह्यं पुराकल्पे प्रचोदितम् ।
नाप्रशान्ताय दातव्यं ना पुत्रायाशिष्याय वा पुनः ॥ ६.२२ ॥

यस्य देवे पराभक्ति-र्यथा देवे तथा गुरौ ।
तस्यैते कथिताह्यर्थाः प्रकाशन्ते महात्मनः ॥
प्रकाशन्ते महात्मन इति ॥ ६.२३ ॥

ओं सहनाववतु इति शान्तिः ।
इति श्वेताश्वेतरोपनिषत् समाप्ता ॥

---

**6.21** தவத்தின் பெருமையாலும், தெய்வத்தின் அருளாலும், பிரம்மத்தை யறிந்த ச்வேதாச்வதர மஹரிஷி அத்யாச்ரமிகளாகிய ஸந்நியாஸிகளுக்கு ரிஷிகணங் களால் போற்றப்படும் பிரம்மவித்தையைத் தெளிவாக உபதேசித்தார்.

**6.22** வேதாந்தத்தில் உயர்ந்த ரகசியமானதும் முந்திய கல்பத்தில் உபதேசிக்க்ப்பட்டதும் ஆகிய இதை மன

---

6.20 ஒ. தனக்குவமை இல்லாதான் தான் சேர்ந்தார்க்கல்லால்
மனக்கவலை மாற்றலரிது. — குறள்

6.21 தவத்தின் பெருமையும், தெய்வத்தின் அருளும் ஆகிய இரண்டும் சேர்ந்த இடத்திலேயே ஞானம் பூர்த்தியாகின்றது. தவம் உள்ள இடத்தில் அருள் சுரக்கும்.

6.22 அபுத்ராய அசிஷ்யாய வா — தகுதியற்ற புத்திரனுக்கோ தகுதியற்ற சிஷ்யனுக்கோ என்றும் இது கொள்ளப்படும். தகுதி என்னவென்று கடைசி மந்திரம் கூறுகின்றது.

தப: ப்ரபாவாத் தேவப்ரஸாதாச்ச ப்ரஹ்ம ஹ
ச்வேதாச்வதரோऽத வித்வான்।
அத்யாச்ரமிப்ய: பரமம் பவித்ரம் ப்ரோவாச
ஸம்யக்ருஷிஸங்கஜுஷ்டம் ॥ 6.21॥

வேதாந்தே பரமம் குஹ்யம் புராகல்பே
ப்ரசோதிதம் ।
நாப்ரசாந்தாய தாதவ்யம் நாபுத்ராயா-
சிஷ்யாய வா புன: ॥ 6.22॥
யஸ்ய தேவே பராபக்திர்-யதா தேவே
ததா குரௌ ।
தஸ்யைதே கதிதாஹ்யர்த்தா: ப்ரகாசந்தே
மஹாத்மன: ।
ப்ரகாசந்தே மஹாத்மன இதி ॥ 6.23॥

ஓம் ஸஹநாவவது இதி சாந்தி:
இதி ச்வேதாச்வதரோபநிஷத் ஸமாப்தா

---

வமைதியற்றவனுக்கோ அல்லது புத்திரனோ சிஷ்யனோ இல்லாத ஒருவனுக்கு அளிக்கக்கூடாது.

6.23 எவனுக்கு தெய்வத்தினிடம் சிறந்த பக்தியும், தெய்வத்தினிடம் போலவே குருவினிடமும் பக்தியும் உண்டோ அந்த மஹாத்மாவிற்கு உபதேசிக்கப்பட்டால் தான் இவ்வர்த்தங்கள் பிரகாசமடைவனவாம். மஹாத்மா விற்கு உபதேசிக்கப்பட்டால்தான் பிரகாசமடைவனவாம் என்றவாறு.

6.23 'தெய்வபக்தியும் குருபக்தியும் உள்ளவனுக்கு 'அகதி தாஹ்யர்த்தா:' வாய்விட்டுச் சொல்லாமலிருக்கும் ரஹஸ் யார்த்தங்களும் தாமாகவே விளங்கும் என்றும் பொருள் படும்.

ஓம்: (குருசிஷ்யர்களாகிய எங்களை இருவரையும் சேர்த்து (பிரம்மம்) காப்பற்றட்டும். என்று சாந்தி நிலவட்டும்.

இங்ஙனம் சுவேதாச்வதரோபநிஷத்து முற்றும்.

---

## உபநிஷத்தின் விஷயச் சுருக்கம்

## (1)

இவ்வுலகிற்கு ஆதி காரணம் எது, எங்கிருந்து நாம் தோன்றுகிறோம், எதனால் உயிர் வாழ்கிறோம், சேருமிடம் எது, எந்த சக்தியால் ஏவப்பட்டு, இந்தத் துன்பமாகிய கட்டுப்பாட்டில் இருக்கிறோம் என்ற கேள்விகளுடன் உபநிஷதம் தொடங்குகிறது.

காரணமாய்க் கருதப்படும் காலம் முதல் ஜீவன் வரையுள்ள எல்லாவற்றையும் அடக்கியாண்டு கொண்டு நிலை பெற்றுள்ள ஒன்று எதுவோ அதுவே அந்த சக்தி. அது பரப்பிரம்மம் என்றும் பரமாத்மா என்றும் ஞானிகளால் கூறப்படுகிறது.

அறிபவனும், அறியப்படுபவனும் ஆளப்படுபவனும் ஆகிய இரண்டும் பிறப்பற்றவை. அனுபவிக்கப்படு வதற்கும் அனுபவிப்பதற்கும் உறவைக் கற்பிக்கும் ஒருத்தி யாகிய மாயையும் பிறப்பற்றவளே. எப்பொழுதும் இம்மூன்றும் பிரம்மம் என்று ஒருவன் அறிகிறானோ அப் பொழுது அவன் அளவு கடந்து எங்கும் வியாபித்த

ஆத்மாவாயும் எல்லா வடிவங்களிலும் விளங்குப வனுயும் செயலேதுமற்றவனுயுமாகிருன். எள்ளினுள் எண்ணெய் போலும், தயிரினுள் நெய் போலும், ஊற்றுக்களில் நீர் போலும், அரணிக்கட்டையில் அக்கினி போலும் இந்தப் பரமாத்மா ஜீவாத்மாவிடம் காணப்படுகிறது. ஸத்தியத்தாலும் தவத்தாலுமே இது காணப்படும்.

(2)

ஸாதகன் தத்துவ ஞானத்தை அடைவதற்காக முதலில் மனதையடக்கி ஞானப்பயிற்சியைக் கைக் கொண்டு பிரகிருதியினின்று தன்னே விடுவித்துக் கொண்டு எங்கும் வியாபிப்பவனும் பெரியவனும் எல்லாமறிந்தவனும், ஸ்வயம்பிரகாசனுமான பகவானே அடைகிருன். அமிருத வாழ்க்கையின் செல்வப்புதல்வர்களாகிய எல்லோரும், தேவலோகவாசிகளுங்கூட இவ்வுபதேசத்திற்குச் செவி சாய்க்கட்டும் என்று ரிஷி கூறுகிருர். ஞானமாகிற அக்கினி எங்கே கடைந்தெடுக்கப்படுகிறதோ, பிராணுயாமத்தால் வாயு எங்கே அடக்கப்படுகிறதோ, ஆனந்தமாகிற ஸோமரஸம் எங்கே பொங்கி வழிகிறதோ, அங்கே மனது புதிய பிறவியை அடைகிறது. அப்போது பிறவியின் வித்து நசித்து இருவினேகளின் தொடர்பும் நீங்குகிறது.

மார்பு, கழுத்து, தலை ஆகிய மூன்றையும் நேராக நிறுத்தி உடலேச் சமநிலேயில் வைத்து, இந்திரியங்களே மனதாலிழுத்து, இருதயத்தில் புகுத்திப் பிறவிச் சுழல்களே பிரம்மமாகிய தெப்பத்தால் கடக்க வேண்டும். இந்திரியங்களின் சேஷ்டைகளேயடக்கிப் பிராணனுடைய வியாபாரங்களேயுமடக்கி அறிவாளியானவன் கவனக் குறைவில்லாமல் துஷ்டக் குதிரை பூட்டிய வண்டி போன்ற மனதை அடக்கி நடத்த வேண்டும். சமமானதும், பரிசுத்தமானதும், பருக்கைக் கற்கள், நெருப்பு, தூசு, சந்தடி, நீர்த் தேக்கங்கள் முதலியவை இல்லாததும் மன

திற்கினியதும் காற்று அதிகமாய் வீசாததுமான இடத்தில் யோகம் பழக வேண்டும் பனி, புகை, வெயில் காற்று, நெருப்பு மின்மினி, மின்னல், ஸ்படிகம், நிலவு ஆகிய வற்றின் தோற்றம் யோக மார்க்கத்தில் ஏற்படுவது பிரம்ம ஸாக்ஷாத்காரத்தின் முன்னோட்டமாம்.

சப்த ஸ்பர்ச ரூப ரஸ கந்த தன் மாத்திரைகளின் உணர்ச்சி யோகத்தின் பயனாக ஏற்படும் போது யோக சித்தி ஏற்படும். யோகாக்னியால் புடம் போட்டது போன்ற சரீரத்தை யடைந்த யோகிக்கு நோயில்லை, மூப்பில்லை. மரணமில்லை. உடலின் பளுவின்மை, நோயின்மை, அவாவின்மை, நிறத்தெளிவு, நல்ல குரல், இனிய மணம், மல ஜலங்களின் குறைவு, ஆகியவை யோக முயற்சியின் முதல் அடையாளங்கள். மண்ணால் மூடப்பட்டிருந்த ஒரு விக்கிரகம் தேய்த்து சுத்தப்படுத்திய பின் எங்ஙனம் பிரகாசிக்குமோ அங்ஙனம் ஜீவாத்மா ஒளிவிடுவதாகும். அப்போது 'பிறப்பற்றவனும், மாறு பாடற்றவனும், பிரகிருதி தத்துவங்களால் தொடரப் படாதவனுமான பகவானை உணர்ந்து ஒருவன் எல்லாப பாவங்களினின்றும் விடுபடுகின்றான். இந்த பகவான் எல்லா திசைகளையும் வியாபிப்பவன், ஆதியில் தோன்றிய ஹிரண்யகர்ப்பன், கருவினுள் இருப்பவன்; பிறந்தவை களும் இவனே; இவனே எல்லா உயிர்களிலும் எங்கும் முகமுடையவனாய் நிற்பவன்.

## (3)

எவன் இவ்வுலகனைத்தையும் தனது சக்தியால் ஆள் பவனோ அவன் பிரத்யகாத்மாவாக எல்லா உயிர்களிலும் உறைகிறான். உலகை ஆக்கியளித்து முடிவில் தனக்குள் ஒடுக்கிக் கொள்ளுகிறான். எங்குங் கண்ணும் எங்கும் வாயும் எங்குங்கையும் எங்குங்காலும் உடையவன் அவன். 'மகிமை பொருந்தியவனும், சூரியனைப்போல்

ஒளிமிக்கவனும், இருளுக்கப்பாற்பட்டவனுமான அந்தப் புருஷனை நான் அறிவேன். அவனை அறிந்த பின்பே ஒருவன் சாவைக் கடந்து செல்லுகிறான். மோக்ஷத்திற்கு வேறு வழி இல்லை' என்று ரிஷி கூறுகிறார். எது முன்னிருந்ததோ, எது இனிவரப் போகிறதோ, எது இப்பொழுது காணப்படுவதோ அது எல்லாம் இப்பரம புருஷனே. எல்லா இந்திரியங்களின் குணங்களாலும் பிரகாசிப்பவனும் ஆனால் இந்திரியங்கள் ஏதுமில்லாதவனும், அனைத்திற்கும் மேம்பட்டவனும் அனைத்தையும் ஆள்பவனும் அனைத்திற்கும் புகலிடமும் நண்பனுமாயிருப்பவனும் அவனே. ஒன்பது வாயில்களுள்ள உடலில் வசிப்பவனாய் ஹம்ஸத்தைப்போல் பற்றின்றி வெளியுலகில் அவன் விளையாடுகிறான். அவன் கையில்லாமல் பிடிப்பவனாயும், காலில்லாமல் வேகமாய்ச் செல்பவனாயும் இருக்கிறான்; கண்ணில்லாமல் பார்க்கிறான்; காதில்லாமல் கேட்கிறான்; அறிய வேண்டியதை அவன் அறிகிறான்; ஆனால் அவனை அறிபவன் எவனுமில்லை. அணுவிற்கணுவாயும் பெரிதிற்குப் பெரிதாயுமுள்ள அவன் ஆத்மாவாக இந்த ஜீவனுடைய இருதய குகையில் மறைந்துறைகிறான். ஆசை நீங்கியவன் உள்ளத்தெளிவால் ஆத்மாவைக் கண்டு சோகமற்றவனாகிறான்.

## (4)

'ஆணும் நீயே, பெண்ணும் நீயே, குமரனும் நீயே, குமரியும் நீயே; கிழவனாகத் தடியூன்றித் தள்ளாடிச் செல்பவனும் நீயே. கரிய வண்டாகவும், பச்சைக்கிளியாகவும், மின்னலுடன் கூடிய மேகமாகவும், ருதுக்களாகவும், சமுத்திரங்களாகவும் நீயே உளாய். ஆதியற்றவனாய் எங்கும் நிறைந்தவனாய் நீ இருக்கிறாய். உன்னிடமிருந்தே எல்லா உலகங்களும் தோன்றியுள்ளன' என்று ரிஷி எங்கும் நிறைந்த பரம்பொருளைப் போற்றுகிறார்.

ஸம்ஸாரபந்தத்தையும் முக்தியையும் பற்றிப்பேசும் போது சிலேடையாக ஜீவனைப்பற்றிப் பின்வருமாறு கூறுகிறுர். (முக்குணங்களாகிய) வெளுப்பும் சிவப்பும் கறுப்பும் கலந்த வர்ணமுடைய (பிரகிருதியாகிய) பெண் ஆட்டுடன் (கட்டுப்பட்ட புருஷனுகிய) ஒரு ஆண் ஆடு கூடிப் பல குட்டிகளைப் பெறுகிறது. மற்றொரு ஆண் ஆடு (முக்தபுருஷன்) போகங்களை யனுபவித்த பின் பெண் ஆட்டை விட்டு விலகுகிறது.

மற்றும் ஒரு உவமை. அழகிய சிறகு படைத்த பக்ஷிகள் இரண்டு இணை பிரியாமல் ஒரே மரத்தில் வசிக்கின்றன. அவற்றுள் ஒன்று இனிப்பும் புளிப்புமான பழங்களை உண்கிறது. மற்றதோவெனில் உண்ணுமல் பார்த்துக் கொண்டிருக்கிறது. இரண்டும் ஸமமான உறைவிடமு டையனவாயினும் ஒன்று (ஜீவன்) தாழ்வானநிலையடைந்து மதிமயங்கித் திறமையற்றுச் சோகிக்கிறது. அது எப்பொழுது ஏற்றமுள்ளதும் ஆளுந்திறமை வாய்ந்ததுமான - மற்றதைப் பார்க்கிறதோ அப் பொழுது அந்த மகிமை தன்னுடையதே என்று கண்டு சோகம் நீங்கியதாகிறது.

அழிவற்ற பரம்பொருளை எவன் அறியவில்லையோ அவன் வேதமந்திரங்களால் என்ன செய்யப் போகிறுன்? அறிந்தவர்களே வாழ்க்கைப்பயனை எய்துகின்றனர்.

எவன் தேவர்களைச் சிருஷ்டிப்பவனே, உலகனைத் திற்குமதிபனே, துன்பங்களைத் துடைப்பவனே, தீர்க்க தரிசியோ, ஹிரண்ய கர்ப்பன் பிறந்ததைப் பார்த்தவனே அவன் நமக்குச் சிறந்த புத்தியை அளிக்கட்டும்.

பாலில் நெய்யைவிட அதிஸூக்ஷ்மமாய் எல்லா உயிர்களிலும் மறைந்திருக்கும் அவனை அறிந்து ஒருவன் எல்லாத் தளைகளினின்றும் விடுபடுகிறுன்.

எப்பொழுது அவித்தை நீங்குகிறதோ, அப்பொழுது பகலுமில்லை இரவுமில்லை, உளதுமில்லை, இலதுமில்லை,

கேவல சிவம் மட்டும் உளது. அந்தச் சிவனைக்கட்டிப் பிடித்தவர் எவருமில்லை. அவனுக்குப் பிரதிமையும் உவமையும் சமமும் எதுவுமில்லை. அவனுடைய வடிவம் கண்ணெதிரில் நிற்பதில்லை. உள்ளத்தில் உறையும் அவனைப் புத்தியால் எவர்கள் அறிகிறார்களோ அவர்கள் சாவைக் கடக்கிறார்கள். சிவனே! உன்னுடைய தக்ஷிணாமூர்த்தி வடிவம் எதுவோ அதனால் என்னைக் காத்தருள்வாயாக!

## (5)

அறிவும் அறியாமையுமாகிய இரண்டும் பரப்பிரம் மத்திடம் வைக்கப்பட்டுளது. அறியாமை அழிவது, அறிவு அழியாதது. எவன் பிரகிருதியின் வடிவந்தோறும் ஊடுருவிநிற்கிறானோ, எவன் அனைத்தையும் ஆளுகிறானோ, ஹிரண்யகர்ப்பன் ஆதியில் பிறந்ததைப் பார்த்து அவனுக்கு ஞானத்தையளிததவன் எவனோ, அவனே அந்தப்பரப்பிரம்மம். எங்ஙனம் சூரியன் மேலும கீழும் குறுக்கிலும் எல்லாத் திசைகளிலும் ஒளியைப் பரப்பு கிறானோ அங்ஙனம் பகவான் ஒருவனாகவே இவ்வனைத் திற்கும் மேலிருந்து ஆளுகிறான்.

குணவசப்பட்டவன் பயனைக்கருதிச் செயல்புரிபவ னாகவும் அச்செயலின் பயனை அனுபவிப்பவனாகவும் ஆகிறான். அவன் இந்திரியங்களை அடக்கியாள்பவனாயி னுங்கூட முக்குணங்களுக்கு வசப்பட்டுப் பல்வேறு உரு வங்களைத்தாங்கித் தன் கர்மங்களால் முவ்வகைப்பட்ட மார்க்கத்தில் உலவுகிறான்.

ஒரு மயிரிழையின் நுனியை நூறு பாகமாக்கி அதை மறுபடி நூறுபாகமாக்கினால் எவ்வளவு ஸூக்ஷ்ம மாயிருக்குமோ அவ்வளவு ஸூக்ஷ்மமானவன் ஜீவன். அவன் பெண்ணுமல்லன், ஆணுமல்லன், அலியு மல்லன். செயலின் குணங்களாலும் மனதின் குணங்

களாலும் எந்தெந்த உடலை எடுத்துக்கொள்கிருனே அத்துடன் ஒன்றுபட்டு நிற்கிருன்.

அடி முடியில்லாதவனும், அநேக வடிவுடையவனும், அவித்தையினிடையில் அனைத்துலகையும் சிருஷ்டிப்பவனும், அனைத்தையும் ஒருவஞக வியாபித்திருப்பவனும் ஆகிய தேவனை அறிந்து ஒருவன் எல்லாக்கட்டுகளினின்றும் விடுபடுகிருன்.

## (6)

எதனுல் உலகமாகிற இப்பெரிய சக்கரம் சுழற்றப்படுகிறதோ அது இயற்கை என்று சில அறிஞர்களும், காலம் என்று பிறரும் மதிமயங்கியவர்களாய்க் கூறுகின்றனர். இதுவெல்லாம் தெய்வத்தின் மகிமையாம். எவனுல் இதுவெல்லாம் எப்போதும் வியாபிக்கப்பட்டுளதோ, எவன் அறிவுமயமானவனே, காலத்தையும் சிருஷ்டிப்பவனே, குணங்களுக்கீசனே, எல்லாமறிந்தவனே, அவனுல் ஏவப்பெற்றே கிரியாசக்தியால நு பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசம் எனத் தோன்றுகிற தெனச் சிந்தித்துணரவேண்டும். ஈசுவரார்ப்பணமாகக் கர்மத்தைச்செய்து அதனுல் கர்மத்தளையின்னின்று விடுபட்டு ஒருவன் உண்மை நிலையில் தனித்து நிற்கும் வேறொருவன் ஆகிருன். ஈசுவரன் விருக்ஷம்போல் வளரும் ஸம்ஸாரத்தையும் காலத்தையும் உருவத்தையும் கடந்து தனியாய் நிற்பவன். அவனிடமிருந்தே இந்தப்பிரபஞ்சம் தோன்றிச் சுழல்கிறது. ஈசுவரர்களுக்கெல்லாம் மகேசுவரனும் தேவதைகளுக்கெல்லாம் மேலான தெய்வமும், தலைவர்களுக் கெல்லாம் மேலான தலைவனும், போற்றுதற்குரிய உலக நாயகனும், அனைத்திற்கும் மேலானவனுமாகிய அந்த தேவனை, நாம் அறியவேண்டும். அவனுக்குக் காரியமுமில்லை, கரணமுமில்லை, அவனுக்கு மேலானவனே சமமானவனே இல்லை. அவனுடைய சிறந்த சக்தியும்,

இயற்கையான ஞானமும் பலமும் செயலும் வெகுவாக வேதங்களில் கூறப்படுகின்றன. பட்டுப்பூச்சி தனது நூல்களால் தன்னை மறைத்துக்கொள்வதுபோல் பிரகிருதியில் தோன்றும் பொருள்களால் அவன் தன்னை மறைத்துக்கொள்கிறான்.

நிலையுள்ள பொருள்களிடைநிலையுள்ளவனும், அறிவுள்ள உயிர்களின் அறிவாயும், ஒருவனாய் நின்று அனைவருடைய ஆசைகளையும் அறிபவனும், அனைத்திற்கும் காரணமாயும், ஞானயோகத்தால் அடைவதற்குரியவனும் .உள்ள அந்த தேவனை அறிந்து ஒருவன் எல்லாத்தளைகளினின்றும் விடுபடுகிறான்.

அங்கே சூரியன் பிரகாசிப்பதில்லை; சந்திரனும் நக்ஷத்திரங்களும் பிரகாசிப்பதில்லை; அக்கினி எங்ஙனம் பிரகாசிக்கும்? ஸ்வயம் பிரகாசமுள்ள அவனைப்பின்பற்றியே அனைத்தும் பிரகாசிக்கின்றது. அவனொளியாலேயே இவையனைத்தும் விளங்குகிறது.

எப்பொழுது ஒரு தோலைப்போல், மனிதர்கள் ஆகாயத்தைச்சுருட்டக்கூடுமோ அப்பொழுது தெய்வத்தை அறியாமல் ஒருவனுக்குத் துன்பத்தின் முடிவு ஏற்படும்.

தவத்தின் பெருமையாலும், தெய்வத்தின் அருளாலும், பிரம்மத்தையறிந்த சுவேதாச்வதர மஹரிஷி அத்யாச்ரமிகளாகிய ஸந்நியாஸிகளுக்கு இந்த பிரம்ம வித்தையை உபதேசித்தார். எவனுக்குத் தெய்வத்தினிடம் சிறந்த பக்தியும் தெய்வத்திடம் போலவே குருவினிடமும் பக்தியும் உண்டோ அந்த மகாத்மாவிற்கு உபதேசிக்கப்பட்டால் தான் இவவர்த்தங்கள் பிரகாசமடைவனவாம்அப்படிப்பட்ட சீடனுக்கு குரு வாய்விட்டுச் சொல்லாத ரகசியங்களும் தாமே விளங்கும்.

இங்ஙனம் ச்வேதாச்வதர உபநிஷத்து
முற்றும்

---

# ॥ हंसोपनिषत् ॥ १५ ॥

ओं पूर्णमदः पूर्णमिदं पूर्णात्पूर्णमुदच्यते ।
पूर्णस्य पूर्णमादाय पूर्णमेवावशिष्यते ॥
ओं शान्तिः शान्तिः शान्तिः ॥

गौतम उवाच ।
भगवन् सर्व धर्मज्ञ सर्व-शास्त्रविशारद ।
ब्रह्मविद्या-प्रबोधो हि केनोपायेन जायते ॥ १ ॥

सनत्कुमार उवाच ।
विचार्य सर्वधर्मेषु मतं ज्ञात्वा पिनाकिनः ।
पार्वत्या कथितं तत्वं श्रृणु गौतम तन्मम ॥ २ ॥

---

## 15. ஹம்ஸோபநிஷத்து

ஓம். அது பூர்ணம். இதுவும் பூர்ணம். பூர்ணத்திலிருந்து பூர்ணமுதயமாயுள்ளது. பூர்ணத்தினின்று பூர்ணத்தை யெடுத்தும் பூர்ணமே எஞ்சி நிற்கிறது.

உபநிஷத்தின் பெயரும் தொடர்பும் —

முக்திகோபநிஷத்துக்கூறும் வரிசையில் இது பதினைந்தாவது உபநிஷத்து. சுக்லயஜுர்வேதத்தைச் சேர்ந்தது. ஹம்ஸ மந்திர தியானமும் யோக முறையும் இங்கு கூறப்படுவதால் இது ஹம்ஹோபநிஷத்து எனப்

## 15. ஹம்ஸோபநிஷத்

ஓம் பூர்ணமத: பூர்ணமிதம் பூர்ணுத் பூர்ண-
முதச்யதே । பூர்ணஸ்ய பூர்ணமாதாய
பூர்ண மேவாவசிஷ்யதே ॥
ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ॥

கௌதம உவாச ।
பகவன் ஸர்வதர்மஜ்ஞ ஸர்வசாஸ்த்ரவிசாரத ।
ப்ரஹ்மவித்யாப்ரபோதோ ஹி கேநோபாயேன
ஜாயதே ॥ 1 ॥

ஸநத்குமார உவாச —

விசார்ய ஸர்வ தர்மேஷு மதம் ஜ்ஞாத்வா
பிநாகிந: । பார்வத்யா கதிதம் தத்வம் ச்ருணு
கௌதம தன்மம ॥ 2 ॥

---

பெயருடையதாயிற்று. இது ஸநத்குமாரரால் கௌத
மருக்கு உபதேசிக்கப்பட்டது.

1. கௌதமர் கூறியது —

எல்லா தர்மங்களையும் உணர்ந்தவரே! எல்லா சாஸ்தி
ரங்களிலும் நிபுணரே! எந்த உபாயத்தால் பிரம்ம
வித்தையின் தெளிவான ஞானம் ஏற்படும்.

ஸநத்குமாரர் கூறியது —

2. எல்லா தருமங்களையும் ஆராய்ந்து பிநாகபாணியான
பரமசிவனுடைய உள்ளக்கருத்தை உணர்ந்து பார்வதி
யால் எந்த தத்துவம் உபதேசிக்கப்பட்டதோ அதை
என்னிடமிருந்து கேட்பாயாக.

अनाख्येय-मिदं गुह्यं योगिने कोशसन्निभम् ।
हंसस्यांकृतिविस्तारं भुक्तिमुक्ति-फलप्रदम् ॥ ३ ॥
अथ हंसपरमहंसनिर्णयं व्याख्यास्यामो ब्रह्मचारिणे ।
दान्ताय गुरुभक्ताय हंसहंसेति यथा ध्यानम् ॥ ४ ॥

सर्वेषु देहेषु व्याप्तं वर्तते यथा अग्निः काष्ठेषु तिलेषु तैलमिव ।
तं विदित्वा न मृत्युमेति ॥ ५ ॥

गुदमवष्टभ्य आधाराद्वायुमुत्थाप्य स्वाधिष्ठानं त्रिः प्रदक्षिणीकृत्य मणिपूरकं गत्वा अनाहत-मतिक्रम्य शिश्नाभे पार्श्वे भवतः ।
विशुद्धौ प्राणान्निरुध्य आज्ञामनुध्यायन् ब्रह्मरन्ध्रं ध्यायन् त्रिमात्रोऽहमित्येवं सर्वदा पश्यत्यनाकारश्च भवति ॥ ६ ॥

---

3. இது இரகசியமானது; யோகிகளிடம் பொக்கிஷம் போல் வைக்கப்பட்டது, ஹம்ஸத்தின் ஸ்வரூபத்தை விளக்க வைப்பது; புக்தியையும் முக்தியையும் பயனாக அளிப்பது; (தகுதியுடையவர்க்கன்றி வெளிப்படையாகப் பேசுதற்கரியது.)

4. பிரம்மசாரியாகவும், புலடைக்கம் உடையவனாக வும், குருபக்தி உடையவனாகவும் உள்ளவனுக்கு 'ஹம்ஸ ஹம்ஸ' என்ற மந்திர தியானத்தை எவ்வாறு செய் யவேண்டும் என்பதையும் ஹம்ஸபரமஹம்ஸ நிர்ணய த்தையும் இனி வியாக்கியானம் செய்வோம்.

அநாக்க்யேய- மிதம் குஹ்யம் யோகினே கோசஸந்நிபம் । ஹம்ஸஸ்யாக்ருதி -விஸ்தாரம் புக்திமுக்திபலப்ரதம் ॥ 3 ॥

அத ஹம்ஸ- பரமஹம்ஸ- நிர்ணயம் வயாக்கயாஸ்யாமோ ப்ரஹ்மசாரிணே । தாந்தாய குருபக்தாய ஹம்ஸ ஹம்ஸேதி யதா த்த்யானம் ॥ 4 ॥

ஸர்வேஷு தேஹேஷு வ்யாப்தம் வர்த்ததே யதா அக்னி: காஷ்டேஷு திலேஷு தைலமிவ । தம் விதித்வா ந ம்ருத்யுமேதி ॥ 5 ॥

குதமவஷ்டப்ப்ய ஆதாராத் வாயுமுத்தாப்ய ஸ்வாதிஷ்ட்டானம் த்ரி: ப்ரதக்ஷிணீக்ருத்ய மணிபூரகம் கத்வா அநாஹத- மதிக்ரம்ய சிச்ஞுபே பார்ச்வே பவத: । விசுத்தௌ ப்ராணுந்நிருத்த்ய ஆஜ்ஞாமனுத்த்யாயன் ப்ரஹ்மரந்த்ரம் த்த்யாயன் த்ரிமாத்ரோ ऽஹமித்யேவம் ஸர்வதா பச்யத்யனுகாரச்ச பவதி ॥ 6 ॥

---

5. விறகில் தீ போலும், எள்ளில் எண்ணெய்போலும் எங்ஙனம் எல்லா உடல்களிலும் எங்கும் நிறைந்ததாக உள்ளது எதுவோ அதை அறிந்து ஒருவன் சாவை அடைய மாட்டான்.

6. (ஸாதகன் ஸித்தாஸனத்திலிருந்து கொண்டு இடது காலின் மணிக்கட்டால்) ஆஸனத்வாரத்தை அழுத்திக் கொண்டு மூலாதாரத்திலிருந்து வாயுவைக்கிளப்பி (பிராணனையும் அபானனையும் ஐக்கியப்படுத்தி குண்டலினியை எழச்செய்து ஸுஷும்னையின் வாயிலைத்திறந்து கொண்டு மூலாதார சக்ரத்தினுள் சென்று (பிறகு) ஸ்வாதிஷ்டடானத்தை அடைந்து மூன்று தடவை பிரதக்ஷிணம் செய்து, மணி பூரகம்

एषोऽसौ परमहंसो भानुकोटिप्रतीकाशो
येनेदं सर्वं व्याप्तम् ॥ ७ ॥

तस्याष्टधा वृत्तिर्भवति । पूर्वदले पुण्ये मतिः ।
आग्नेये निद्रालस्यादयो भवन्ति । याम्ये क्रौर्ये मतिः ।
नैरृते पापे मनीषा । वारुण्यां क्रीडा । वायव्यां
गमनादौ बुद्धिः । सौम्ये रतिप्रीतिः । ईशान्ये
द्रव्यादानम् । मध्ये वैराग्यम् । केसरे जाग्रदवस्था ।
लिंगे सुषुप्तिः । पद्मत्यागे तुरीयम् । यदा हंसो नादो
विलीनो भवति तत् तुरीयातीतम् ॥ ८ ॥

---

சென்று அதன்பின் அநாஹத சக்ரம் வந்து (தியானத்திலிருந்து) அதையும் தாண்டி விசுத்திசக்ரத்தின் கீழ்பாகத்தில் லிங்கவடிவில் உள்ள உள் நாக்கின் இருபுறமும் உள்ள மார்க்கங்களை விட்டு நடுவிலுள்ள நாடிவழியாக விசுத்திசக்ரத்தில் பிரவேசித்துப் பிராணனை அடக்கிப் பிறகு ஆக்ஞாசக்ரத்தையடைந்து ஹம்ஸ மந்திரத்தை தியானித்து அதன் மேல் பிரம் மரந்த்ரம் எனும் ஸஹஸ்ராரசக்ரத்தை அடைந்து மூன்று மாத்திரை வடிவான பிரம்மமே நான் என்று ஸமாதியில் நின்று (பிறகு கீழ் நிலைக்கு இறங்கிய பொழுதும்), எக்காலத்தும் அதையே பார்த்து (உடலிலிருந்தும்) உருவமில்லாதவனைப்போல் ஆகி விடுகிறான்.

7. அவ்வாறு துரீயநிலை எய்திய இவன் பரமஹம்ஸன். கோடி சூரியப்பிரகாசம் பொருந்தியவனும் எவனால் இவ்வுலகனைத்தும் வியாபிக்கப்பட்டுள்ளதோ அந்தப் பரமாத்மாவாகவே அவன் ஆகிவிடுகிறான்.

ஏஷோ ऽஸெள பரமஹம்ஸோ பானுகோடிப்ரதீ காசோ யேநேதம் ஸர்வம் வ்யாப்தம் ॥ 7 ॥

தஸ்யாஷ்டதா வ்ருத்திர்ப்பவதி । பூர்வதலே புண்யே மதி: । ஆக்னேயே நித்ராலஸ்யாதயோ பவந்தி । யாம்யே க்ரௌர்யே மதி: । நைர்ருதே பாபே மனீஷா । வாருண்யாம் க்ரீடா । வாயவ்யாம் கமனுதெள புத்தி: । ஸௌம்யே ரதிப்ரீதி: । ஈசான்யே த்ரவ்யாதானம் । மத்த்யே வைராக்யம் । கேஸரே ஜாக்ரதவஸ்த்தா । லிங்கே ஸுஷுப்தி: । பத்மத்யாகே துரீயம் । யதா ஹம்ஸோ நாதோ விலீனோ பவதி தத் துரீயாதீதம் ॥ 8 ॥

---

8. (பிரம்மரந்திரத்திலிருந்து கீழே இறங்கி மீண்டும் இருதய ஸ்தானத்திற்குப் பன்னிரண்டிதழ்க்கமலவடி வான அநாஹத சக்ரத்திற்கு வரும்போது உலகவிவகா ரத்தில் மனம் புகுகிறது). அப்பொழுது அந்த ஜீவ னுக்கு எட்டு விதமான வகையில் மனதின் விருத்தி ஏற்படலாம். (பன்னிரண்டிதழ்களுள் நாலு இதழ்கள் விவஹாரத்தைக்கடந்த நிலையைக் குறிப்பவை. மற்ற எட்டிதழ்கள் எட்டுவகையான உலக விருத்திகளைக் குறிப்பவை.) கிழக்கு இதழில் மனம் புகுந்தால் புண் ணியத்தில் பிரவிருத்தி. தென் கிழக்கில் தூக்கமும் சோம்பலும் ஏற்படுகின்றன. தெற்கில் கொடுமையில் நோக்கம். தென்மேற்கில் பாவச்செயலில் விருப்பம். மேற்கில் விளையாட்டு. வடமேற்கில் நடத்தல் முதலி யன. வடக்கில் ஞானிகளுக்கு ஆத்மரதியிலும் அக்ஞா னிகளுக்குச் சிற்றின்பத்திலும் ஆசை. வடகிழக்கில் பொருளீட்டுவதில் ஆசை. கமலத்தின் நடுவில் வைராக்கியம். கேஸரத்தில் விழிப்புநிலை. கர்ணிகை யில் கனவுநிலை. அதன் துவாரத்திலுள்ள லிங்கத்தில் ஸுஷுப்தி (உறக்கம்) இந்த இருதய கமலத்தை விட்

अथो नाद आधाराद् ब्रह्मरन्ध्रपर्यन्तं शुद्धस्फटिकसंकाशः स वै ब्रह्म परमात्मेत्युच्यते ॥ ९ ॥

॥ अजपा हंसमन्त्र जपप्रकारः ॥

अथ हंस ऋषिः । अव्यक्त गायत्री छन्दः ।
परमहंसो देवता । हं बीजम् । सः शक्तिः ।
सोऽहं कीलकम् ॥ १० ॥

षट्संख्यया अहोरात्रयोरेकविंशति सहस्राणि षट् छतान्यधिकानि भवन्ति ।
सूर्याय सोमाय निरंजनाय निराभासाय अतनुसूक्ष्माय प्रचोदयादिति ॥ ११ ॥

अग्नीषोमाभ्यां वौषट् हृदयाद्यंगन्यास करन्यासौ भवतः ॥ १२ ॥

---

டெழுந்தால் துரீயம். அப்போது ஹம்ஸரூபியான ஜீவன் (அர்த்த மாத்திரை) நாதவடிவினனாய் பிரம மத்தில் கரைந்தவனாய் ஆகிவிடுகிறான். அது துரீயா தீதம் எனும் ஒப்புயர்வற்ற நிலை.

9. மூலாதாரத்திலிருந்து பிரம்மரந்திரம் வரை துரீய ஸ்வரூபம் சுத்தஸ்ப்படிகம்போல் பிரகாசிக்கும். அந்த நாதப்பிரம்மம் பரமாத்மா எனக்கூறப்படுகிறது.

அஜபாஹம்ஸ மந்த்ரஜபம் செய்யும் முறை

10. காலையில் துயிலெழுந்தது முதல் மறுகாலை வரை இரவு பகல் முழுவதும் இடைவிடாது 'ஹம்' என்று உள் மூச்சும் 'ஸ:' என்று வெளி மூச்சுமாக நிகழ்வது

அதோ நாத ஆதாராத் ப்ரஹ்மரந்த்ரபர்யந்தம் சுத்தஸ்ப்படிகஸங்காச: ஸ வை ப்ரஹ்ம பரமாத்மேத்யுச்யதே ॥ 9 ॥

### அஜாபா ஹம்ஸமந்த்ர ஜபப்ரகார:

அத ஹம்ஸ ருஷி: । அவ்யக்த காயத்ரீச்சந்த: । பரம ஹம்ஸோ தேவதா । ஹம் பீஜம் । ஸ: சக்தி: । ஸோऽஹம் கீலகம் ॥ 10 ॥

ஷட்ஸங்க்யயா அஹோராத்ரயோ-ரேகவிம்சதி ஸஹஸ்ராணி ஷட்சதான்யதிகானி பவந்தி ஸூர்யாய ஸோமாய நிரஞ்ஜனாய நிராபாஸாய அதனுஸூக்ஷ்மாய ப்ரசோதயாதிதி ॥ 11 ॥

அக்னீஷோமாப்யாம் வௌஷட் ஹ்ருதயாத்யங்கந்யாஸ கரந்யாஸௌ பவத: ॥ 12 ॥

---

அஜபாஹம்ஸ மந்த்ரம் எனப்படும். மானசிகமாக ஜபமும் தியானமும் பின்வருமாறு.

அஸ்யஸ்ரீ அஜபா ஹம்ஸமந்த்ரஸ்ய ஹம்ஸருஷி:, அவ்யக்தகாயத்ரீச்சந்த:, பரமஹம்ஸோ தேவதா । ஹம் பீஜம், ஸ: சக்தி: ஸோऽஹம் கீலகம் ॥

11.12 ஆறு எனக் கணக்கிடப்பட்ட ஆறு ஆதாரதேவதைகளான கணபதி, பிரம்மா, விஷ்ணு, ருத்ரன், ஜீவாத்மா, பரமாத்மா ஆகியோர் மூலம் இரவும் பகலும் 21600 முறை செய்யாமல் செய்யப்படுவது 'ஹம்ஸ:, ஸோஹம்' எனும் இந்த ஜபம்.

ஹம்ஸஜபே விநியோக: ॥ ஹம்ஸாம் ஸூர்யாத்மனே அங்குஷ்ட்டாப்ப்யாம் நம: । ஹம்ஸீம் ஸோமாத்மனே தர்ஜனீப்ப்யாம் நம: ।

एवं कृत्वा हृदये हंसमात्मानं ध्यायेत् ॥ १३ ॥

अग्निषोमौ पक्षावोंकारः शिरो बिन्दुस्त्रिणेत्रं
मुखं रुद्रो रुद्राणी चरणौ द्विविधं कण्ठतः
कुर्यादित्युन्मनाः अजपोपसंहार इत्यभिधीयते ॥ १४ ॥

एवं हंसवशान्मनो विचार्यते ॥ १५ ॥

---

ஹம்ஸௌம் நிரஞ்ஜனாத்மனே மத்த்யயாப்ப்யாம் நம: । ஹம்ஸைம் நிராபாஸாத்மனே அநாமிகாப்ப்யாம நம: । ஹம்ஸௌம் அதனு ஸூக்ஷ்மாத்மனே கநிஷ்ட்டிகாப்ப்யாம் நம: । ஹம்ஸ: ப்ரசோதயாத் அக்னீஷோமாத்மனே கரதலகரப்ருஷ்ட்டாப்ப்யாம் நம: ॥ என்று கரநியாஸம் ॥ ஹம்ஸாம் ஸூர்யாத்மனே ஹ்ருதயாய நம: । ஹம்ஸீம் ஸோமாத்மனே சிரஸேஸ்வாஹா । ஹம்ஸௌம் நிரஞ்ஜனாத்மனே சிகாயைவஷட் । ஹம்ஸைம் நிராபாஸாத்மனே கவசாய ஹூம் । ஹம்ஸௌம் அதனு ஸூக்ஷ்மாத்மனே நேத்ரத்ரயாய வௌஷட் । ஹம்ஸ: ப்ரசோதயாத் அக்னீஷோமாத்மனே அஸ்த்ராய பட் ॥ என்று அங்க நியாஸம். பூர்ப்புவஸ்ஸூவரோமிதி திக்பந்த: । த்யானம் ॥

13. இங்ஙனம் செய்து இருதயத்தில் ஹம்ஸ மந்திர வடிவமான ஆத்மாவை தியானம் செய்ய வேண்டும்.

14. அக்னிவடிவான சூரியனும் குளிர்ச்சி வடிவான சந்திரனும் ஹம்ஸத்தின் இரு சிறகுகள்; ஓங்காரம் தலை; மூன்றுபிந்து முக்கண்; ருத்ரன் வாய்; ருதராணீ பாதங்கள் இவ்வாருக ஹம்ஸத்தை நிர்க்குணமாகவும்

ஏவம் க்ருத்வா ஹ்ருதயே ஹம்ஸமாத்மானம் த்த்யாயேத் ॥ 13 ॥

அக்னிஷோமௌ பக்ஷாவோங்கார:
சிரோ பிந்துஸ்த்ரிணேத்ரம் முகம் ருத்ரோ
ருத்ராணீ சரணௌ த்விவிதம் கண்ட்டத:
குர்யாதித்யுன்மனு: அஜபோப -ஸம்ஹார
இத்யபிதீயதே ॥ 14 ॥

ஏவம் ஹம்ஸவசான் மனோ விசார்யதே ॥ 15 ॥

---

ஸகுணமாகவும் இரண்டும் ஒன்ருக தியானித்து தொண்டைக்குள்ளேயே மௌனமாக ஜபம் செய்யவும். இதனுல் மனது பரமாத்மாவில் கரைந்து போவது 'அஜபோபஸம்ஹாரம்' எனக்கூறப்படுகிறது.

15. இங்ஙனம் ஹம்ஸத்தியான வசத்தால் மனதும் அதின் செயலும் 'நேதி, நேதி' இல்லே ஆத்மா தான் உண்டு என்பது ஆராய்ந்து உணரப்படுகிறது.

(ஹம்ஸ காயத்ரீ — ஹம்ஸஹம்ஸாய வித்மஹே பரமஹம்ஸாய தீமஹி । தந்நோ ஹம்ஸ: ப்ரசோதயாத் ॥

தியான சுலோகம் —
அக்னீஷோம கருத்த்வயம் ப்ரணவகம் பிந்து - த்ரிகேர்ணேஜ் ஜ்வலம், பாஸ்வத் - ருத்ரமுகம் சிவாங்க்ரியுகலம் காலாக்னிபாஹூத்வயம் ।
உத்யத்பாஸ்கர- கோடி கோடி ஸத்ருசம் ஜகத்வ்யாபகம், நாதப்ரஹ்மமயம் ஹ்ருதம்புஜபுடே நீடே ஸதா பாவயேத் ॥)

## ॥ दशनादानुभवः ॥

अस्यैव जपकोट्या नादमनुभवति । स च दशविधो जायते । चिणिति प्रथमः । चिणिचिणीति द्वितीयः । घन्यनादस्तृतीयः । शंखनादश्चतुर्थः । पंचमस्तन्त्रीनादः । षष्ठस्तालनादः । सप्तमो वेणुनादः । अष्टमो भेरीनादः । नवमो मृदंगनादः । दशमो मेघनादः ॥ १६ ॥

नवमं परित्यज्य दशममेवाभ्यसेत् ॥ १७ ॥
प्रथमे चिंचिणीगात्रं द्वितीये गात्रभंजनम् ।
तृतीये भेदनं याति चतुर्थे कंपते शिरः ॥ १८ ॥
पंचमे स्त्रवती तालू षष्ठेऽमृतनिषेवणम् ।
सप्तमे गूढ-विज्ञानं परावाचा तथाष्टमे ॥ १९ ॥
अदृश्यं नवमे देहं दिव्यं चक्षुस्तथामलम् ।
दशमं च परं ब्रह्म भवेद्ब्रह्मात्मसन्निधौ ॥ २० ॥

---

பத்துவிதமான நாதானுபவம்

16. இந்த அஜபாஹம்ஸ மந்திரத்தின் கோடி ஜபத்தால் ஸாதகன் அநாஹ நாதத்தை அனுபவிப்பான். அது பத்து விதமாயிருக்கும். 'சிணி' என்பது முதல் 'சிணி சிணி' என்பது இரண்டாவது. மணியோசை மூன்ரு வது. சங்கநாதம் நான்காவது. வீணையொலி ஐந்தா வது. தாளம் ஆருவது. குழல் ஒலி ஏழாவது. பேரீ நாதம் எட்டாவது. மிருதங்க ஒலி ஒன்பதாவது. மேகநாதம் பத்தாவது.

**தசநாதானுபவ :**

**அஸ்யைவ ஜபகோட்யா நாதமனுபவதி.। ஸ ச தசவிதோ ஜாயதே ।**
**சிணிதி ப்ரதம: । சிணிசிணீதி த்விதீய: । கண்டா தாதஸ்த்ருதீய: । சங்க்க நாதச்சதுர்த்த: ।**
**பஞ்சமஸ்தந்த்ரீநாத: । ஷஷ்ட்டஸ் தாளநாத: ।**
**ஸப்தமோ வேணுநாத: । அஷ்டமோ பேரீநாத: ।**
**நவமோ ம்ருதங்கநாத:। தசமோ மேகநாத: ॥ 16 ॥**

**நவமம் பரித்யஜ்ய தசம-மேவாப்ப்யஸேத் ॥ 17 ॥**

**ப்ரதமே சிஞ்சிணீ காத்ரம் த்விதீயே காத்ரபஞ்ஜனம் । த்ருதீயே பேதனம் யாதி சதுர்த்தே கம்பதே சிர: ॥ 18 ॥**

**பஞ்சமே ஸ்ரவதீ தாலூ ஷஷ்ட்டேऽம்ருத நிஷேவணம் । ஸப்தமே கூடவிஜ்ஞானம் பராவாசா ததாஷ்டமே ॥ 19 ॥**

**அத்ருச்யம் நவமே தேஹம் திவ்யஞ்சக்ஷுஸ்ததாமலம் ।**
**தசமஞ்ச பரம் ப்ரஹ்ம பவேத்ப்ரஹ்மாத்மஸந் நிதௌ ॥ 20 ॥**

---

17. முதல் ஒன்பதையும் விட்டுப் பத்தாவதை அப்பியசிக்க வேண்டும்.

18. முதலில் சிஞ்சிணியின் ஒலிவடிவம் தோன்றும். இரண்டாவதில் அது மறையும். மூன்றுவதில் இருதய க்ரந்திபிளவுபடும். நாலாவதில் தலைநடுங்கும்.

19. ஐந்தாவதில் தாடையில் நீர்பெருகும். ஆறுவதில் சிரத்திலிருந்து அமிருதம் நாடிகளில் பாய்ந்து பேரின்பமூட்டும். ஏழாவதில் மறைந்திருந்த ஆத்ம ஞானம் வெளிப்படும். எட்டாவதில் பராவாக் ரூபம் விளங்கும்.

## ॥ मनोलयः ॥

तस्मान्मनो विलीने मनसिगते संकल्पविकल्पे दग्धे पुण्यपापे सदा शिवः शक्त्यात्मा सर्वत्रावास्थितः स्वयं ज्योतिः शुद्धो बुद्धो नित्यो निरंजनः शान्ततमः प्रकाशयतीति वेदानुवचनं भवतीत्युपनिषत् ॥ २१ ॥

---

## ॥ மனோலய: ॥

தஸ்மான்மனோ விலீனே, மனஸி கதே ஸங்கல்ப-விகல்பே தக்தே புண்யபாபே ஸதா சிவ: சக்தயாத்மா ஸர்வத்ராவஸ்த்தித: ஸ்வயஞ்ஜ்யோதி: சுத்தோ புத்தோ நித்யோ நிரஞ்ஜன: சாந்ததம: ப்ரகாசயதீதி வேதானுவசனம் பவதீத்யுபநிஷத் ॥ 21 ॥

20. ஒன்பதாவதில் உடலின் அந்தர்த்தானம் அதாவது மறைவு ஏற்படும். மாசற்ற திவ்யப்பார்வையும் கிட்டும். பத்தாவதில் பூர்ண பிரம்மாத்ம ஸாக்ஷாத்காரத்தால் பிரம்மமாகவே ஆகிவிடுகிறான்.

21 ஆகையால் மனது கரைந்துபோய் ஸங்கல்ப விகல்பங்களும் புண்ணிய பாவங்களும் எரிந்துபோன பிறகு ஜீவன் எப்பொழுதும் ஒவ்வொரு பொருளிலும் சக்தியாக விளங்கும் சிவனாக எங்கும் நிறைந்தவனாய் சுயஞ்ஜோதியாய்ப் பரிசுத்தனாய், ஞானவடிவனாய், நித்தியனாய் மாசற்றவனாய் உத்தம சாந்திஸ்வரூபனாக பிரகாசிக்கிறான் என்பது வேதத்தின் அருள்வாக்கு என்று உபநிஷத்து.

## உபநிஷத்தின் விஷயச்சுருக்கம்

இதில் ஸநத்குமாரரால் கௌதமருக்கு ஹம்ஸமந்தி ரோபாஸனை உபதேசிக்கப்பட்டது கூறப்படுகிறது.

இது யோகிகளின் பொக்கிஷம் போன்றது, புக்தி யையும் முக்தியையும் அளிக்கவல்லது. தகுதியுடைய வர்க்கன்றி வெளிப்படையாகப் பேசுதற்கரியது. பிரம்ம சாரியாகவும் புலடைக்கம் உள்ளவனாகவும் குருபக்தி உடையவனாகவும் இருப்பவனுக்கே இதை உபதேசிக்கலாம்.

ஸாதகன் ஸித்தாஸனத்திலமர்ந்து இடது காலால் ஆஸனத்துவாரத்தை அழுத்திக் கொண்டு பிராணயா மத்தால் குண்டலினியை எழுப்பி ஸுஷும்னையின் வாயிலைத்திறந்து படிப்படியாக மூலாதாரம், ஸ்வாதி ஷ்டானம், மணிபூரகம், அநாஹதம், விசுத்தி ஆகிய சக்ரங்களைக்கடந்து ஆக்ஞா சக்ரத்தில் ஹம்ஸமந் திரத்தை தியானித்து அதன் மேல் ஸஹஸ்ராரசக்ரத்தை அடைந்து பிரம்மமே நான் என்று ஸமாதியில் நின்று பிறகு கீழ் நிலைக்கு இறங்கிய பொழுதும் எக்காலத்தும் அதையே பார்த்து உடலிலிருந்தும் உருவமில்லாத வனைப் போல் ஆய்விடுகிறான்.

கீழ்நிலைக்கு வரும்போது இவனுடைய மனமும் ப்ர கிருதி வசத்தால் தூக்கம், சோம்பல், புண்ணியம், பாவம், விளையாட்டு, பொருளீட்டலில் ஆசை முதலிய வியாபாரங்களில் பூர்வவாசனையால் பிரவிருத்தித் தாலும் அதனால் அவன் தன் நிலையிலிருந்து வீழ்ச்சி அடைவதில்லை. ஹம்ஸரூபியான ஜீவன் அர்த்த மாத் திரை நாத வடிவனாய் பிரம்மத்தில் கரைந்தவனாகி விடுகிறான். ஸதா காலமும் ஹம்ஸ தியானத்தில் ஈடுபடுகிறான்.

காலையில் துயிலெழுந்தது முதல் மறுநாள் காலை வரை இரவுபகல் முழுவதும் இடைவிடாது 'ஹம்'

என்று உள் மூச்சும் 'ஸ:' என்று வெளி மூச்சுமாக 21600 தடவை நிகழ்வது அஜபா ஹம்ஸ மந்திர ஜபம் எனப்படுவது. அக்னிவடிவான சூரியனும் குளிர்ச்சி வடிவான சந்திரனும் அந்த ஹம்ஸத்தின் சிறகுகள், ஓங்காரம் தலை, மூன்று பிந்துக்கள் முக்கண், ருத்ரன் வாய், ருத்ராணி பாதங்கள் என்று தியானம். இவ்வாறு ஹம்ஸத்தை நிர்க்குணமாகவும் ஸகுணமாக வும் தியானித்து ஜபம் செய்தால் மனது பரமாத்மா வில் கரைந்து போவது 'அஜபோபஸம்ஹாரம்' எனக் கூறப்படுகிறது. ஹம்ஸத்யான வசத்தால் மனதும் அதின் செயலும் 'நேதி' இல்லை, ஆத்மாதான் உண்டு என்பது உணரப்படுகிறது.

அஜபாஹம்ஸமந்திரத்தின் கோடிஜபத்தால் ஸாத கன் அநாஹத நாதத்தை அனுபவிப்பான். அது, சிணி, சிணி சிணி, மணியோசை, சங்கநாதம், வீணையொலி, தாளம், குழல், பேரீநாதம், மிருதங்கம், மேகநாதம், போன்று பத்துவகைப்படும். முதல் ஒன்பதையும் கடந்து பத்தாவதை அப்பியசிக்கவேண்டும். நாதத்து டன் உடலில் சில மாறுதல்களும் தோன்றும். இருத யக்கிரந்தி பிளவுபடும். சிரசிலிருந்து அமிருதம் நாடி களில் பாய்ந்து பேரின்பமூட்டும். மறைந்திருந்த ஆத்ம ஞானம் வெளிப்படும். உடல் கண்ணுக்குத் தெரியாமல்போகும். அவன் பிரம்மாத்ம ஸாக்ஷாத் காரத்தால் பிரம்மமாகவே ஆகிவிடுகிறான். மனது கரைந்துபோய், ஸங்கல்ப விகல்பங்களும் புண்ணிய பாவங்களும் எரிந்து போன பிறகு ஜீவன் எப்பொ ழுதும் ஒவ்வொரு பொருளிலும் சக்தியாக விளங்கும் சிவனாக எங்கும் நிறைந்தவனாய், நித்தியனாய், மாசற் றவனாய், உத்தமசாந்திஸ்வரூபனாய் பிரகாசிப்பான் என் பது வேதத்தின் அருள்வாக்கு.

இங்ஙனம் ஹம்ஸோபநிஷத்து முற்றும்.

---

# ।। आरुण्युपनिषत् ।। १६ ।।

ओं आप्यायन्तु ममांगानि । + य उपनिषत्सुधर्मास्ते मयि सन्तु ते मयि सन्तु । ओं शान्तिः शान्तिः शान्तिः ।।

## 16. ஆருண்யுபநிஷத்

ஓம். ஆப்யாயந்து மமாங்கானி+ய உபநிஷத்ஸு தர்மாஸ்தே மயி, ஸந்து தே மயி ஸந்து।
ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ॥

## 16. ஆருண்யுபநிஷத்து

ஓம். என்னுடைய அங்கங்கள் திறனுடையவை யாகட்டும். + உபநிஷத் தருமங்கள் எவையோ அவை என்னிடத்தில் நிலைபெறட்டும் நிலைபெறட்டும். மூவ்வகையிலும் சாந்தி நிலவட்டும்.

உபநிஷத்தின் பெயரும் தொடர்பும் :- 'ஆப்யாயந்து' எனும் சாந்திபாடத்தின் அடையாளத்தால் இது ஸாமவேதத்தைச் சேர்ந்தது என ஊகிக்கப்படும். மஹா நாராயண உபநிஷத் முடிவில் மோக்ஷஸாதனங்கள் அனைத்துள்ளும் ஸந்நியாஸமே சிறந்ததென்று ஆருணி பிரஜாபதியால் உபதேசிக்கப்பெற்றார் என்பது காணப்படுகிறது. அதே மாதிரி இங்கும் பிரஜாபதியால் ஆருணிக்கு ஸந்நியாஸ லக்ஷணம் உபதேசிகப்பட்டது கூறப்படுவதால் இதற்கு ஆருண்யோபநிஷத்து எனப்பெயர் பொருந்துகிறது. ஜாபாலோபநிஷத்தில் பரமஹம்ஸர்களைப் பற்றி 'அவ்யக்த லிங்கா, அவ்யக்தாசாரா, அனுன்மத்தா உன்மத்தவதாசரந்த: — அடையாளங்காண முடியாதவர்கள், நடத்தைகாண முடியாதவர்கள், பித்தர்கள்அல்லராயினும் பித்தர்களைப்போல் நடப்பவர்கள்' என்று கூறி அந்த வரிசையில் ஆருணி சேர்த்துக் கூறப்படுகிறார்.

आरुणिः प्राजापत्यः प्राजपतेर्लोकं जगाम । तं गत्वोवाच । केन भगवन् कर्माण्यशेषतो विसृजानीति । तं होवाच प्रजापतिः । तव पुत्रान् भ्रातृन् बन्ध्वादीन् शिखां यज्ञोपवीतं यागं सूत्रं स्वाध्यायं च भूलोक-भुवर्लोक -स्वर्लोक- महर्लोक -जनोलोक-तपोलोक-सत्यलोकं च अतल-वितल- सुतल-पाताल-रसातल-तलातल-महातल-ब्रह्माण्डं च विसृजेत् । दण्ड-माच्छादनं कौपीनं च परिग्रहेत् शेषं विसृजेत् । इति ॥ १ ॥

गृहस्थो ब्रह्मचारी वानप्रस्थो वा अलौकिकाग्नीत् उदराग्नौ सपारोपयेत् । गायत्रीं च स्ववाच्यग्नौ समारोपयेत् । उपवीतं भुवावप्सुवा विसृजेत् । कुटीचको ब्रह्मचारी कुटुम्बं विसृजेत् । पात्रं विसृजेत् । पवित्रं विसृजेत् । दण्डान् लोकाग्नीन् विसृजेत् ।

---

1. பிரஜாபதியின் புத்திரரான ஆருணி பிரஜாபதி லோகம் சென்ருர். அங்கு சென்று பிரஜாபதியிடம் 'பகவானே! எதனுல் நான் எல்லாக்கர்மங்களையும் முற்றுந்துறந்தவனுவேன்?' என்ருர். பிரஜாபதி அவருக்குக் கூறியதாவது: — உன்னுடைய புத்திரர்கள், சகோதர்கள், உறவினர்கள், சிகை, பூணூல், யாகம், ஸூத்ரம், ஸ்வாத்த்யாயம், பூ: புவ: முதலிய மேல் ஏழு உலகங்களையும் அதல, விதல முதலிய கீழ் ஏழு உலகங்களையும் பிரம்மாண்டம் முழுவதையும் அறவே துறக்க வேண்டும். தண்டம், உடலை மறைக்க ஆடை, கௌபீனம் ஆகியவற்றைவைத்துக் கொள்ளலாம். மற்றவையனைத்தையும் துறக்க வேண்டும் — என்று.

ஆருணி: ப்ராஜாபத்ய: ப்ராஜாபதேர் லோகம் ஜகாம । தம் கத்வோவாச । கேந பகவன் கர்மாண்யசேஷதோ விஸ்ருஜானீதி । தம் ஹோவாச ப்ரஜாபதி: ।தவ புத்ரான் ப்ராத்ரூன் பந்த்வாதீன் சிகாம் யஜ்ஞோபவீதம் யாகம் ஸூத்ரம் ஸ்வாத்த்யாயஞ்ச பூலோக- புவர்லோக- ஸ்வர்லோக- மஹர்லோக- ஜனோலோக- தபோலோக- ஸத்ய லோகஞ்ச அதல-விதல- ஸுதல- பாதால- ரஸாதல- தலாதல- மஹாதல- ப்ரஹ்மாண்டஞ்ச விஸ்ருஜேத் । தண்டமாச்சாதனம் கௌபீநஞ்ச பரிக்ரஹேத் சேஷம் விஸ்ருஜேத் । இதி ॥ 1 ॥

க்ருஹஸ்த்தோ ப்ரஹ்மசாரீ வாநப்ரஸ்த்தோ வா அலௌகிகாக்னீன் உதராக்நௌ ஸமா ரோபயேத் । காயத்ரீஞ்ச. ஸ்வவாச்யாக்நௌ ஸமாரோபயேத் । உபவீதம் புவாவப்ஸு வா விஸ்ருஜேத் । குடீசகோ ப்ரஹ்மசாரீ குடும்பம் விஸ்ருஜேத் । பாத்ரம் விஸ்ருஜேத் । பவித்ரம் விஸ்ருஜேத் ।தண்டாந் லோகாக்னீன் விஸ்ருஜேத் । இதி ஹோவாச ॥ அத ஊர்த்த்வ- மமந்த்ரவதாசரேத் । ஊர்த்த்வ- கமனம் விஸ்ருஜேத் । ஔஷதவதசன- மாசரேத் ।

---

2. கிருஹஸ்தனோ பிரம்மசாரியோ வானப்ரஸ்தனோ (ஆராதித்து வந்த) வைதிக அக்னிகளை வயிற்றிலுள்ள ஜாடராக்னியில் ஸமாரோபணம் செய்து விட வேண்டும். காயத்ரியையும் தனது வாக்கான அக்னி யில் ஸமாரோபணம் செய்து விட வேண்டும். பூணூலை பூமியிலாவது ஜலத்திலாவது போட்டு விடவேண்டும். வேதவிரத்துடன் குடிசையில் வாழ்பவன் குடும்பத்தை துறக்க வேண்டும். பாத்திரத்தை துறக்க வேண்டும்.

इति होवाच ।। अत ऊर्ध्व-ममन्त्र-वदाचरेत् ।
उर्ध्वगमनं विसृजेत् ।
औषधवदशनमाचरेत् । त्रिसन्ध्यां स्नानमाचरेत् ।
सन्धि समाधावात्मन्याचरेत् । सर्वेषु वेदेषु
आरुणमावर्तयेत् उपनिषद्मावर्तयेदुपनिषद्मावर्तयेत् ।
खल्वहं ब्रह्मसूत्रं सूचनात् सूत्रं ब्रह्मसूत्रमहमेव विद्यात् ।
त्रिवृत्सूत्रं त्यजेद्विद्वान् य एवं वेद ।। २ ।।

संन्यस्तं मया संन्यस्तं मया संन्यस्तं मया इति त्रिरुक्त्वा
अभयं सर्वभूतेभ्यो मत्तः सर्वं प्रवर्तते । सखा मा
गोपायौजः सखा मा गोपायोसीन्द्रस्य वज्रोऽसि वार्त्रघ्नः
शमे मे भव यत्पापं तन्निवारय इत्यनेन मन्त्रेण कृतं वैणवं

---

பவித்திரத்தைத் துறக்க வேண்டும். தண்டத்தையும உலக அக்னிகளையும் துறக்க வேண்டும். அதற்குப்பின் மந்திரமில்லாதவனைப்போல் நடந்துகொள்ள வேண்டும். மேலுலகங்களுக்குச் செல்ல வேண்டும் என்ற ஆசை யைத் துறக்க வேண்டும். ஆகாரத்தை மருந்துபோல் (அளவோடு) உண்ண வேண்டும். மூன்று ஸந்தியா காலங்களிலும் ஸ்நானம் செய்ய வேண்டும். ஸந்தியா காலங்களில் ஆத்மாவில் ஸமாதிகூட வேண்டும். வேதங்களனைத்துள்ளும் ஆரண்யகப் பகுதியைப் பாராயணம் செய்ய வேண்டும். உபநிஷத்தைத் திரும் பித் திரும்பிப் படிக்க வேண்டும். ஸூத்ரம் (பூணுல்) ஒரு அடையாளம், அது பிரம்மமே ஸூத்ராத்மா என்பதையும் அந்த பிரம்மமே நான் என்பதையும் குறிக்கிறது என்று உணர வேண்டும். இங்ஙனம் எவன் அறிந்தவனே அந்த அறிவாளி முப்புரிநூலைத் துறக்க வேண்டும்.

த்ரிஸந்த்த்யாம் ஸ்நான- மாசரேத் । ஸந்த்தி ஸமாதா- வாத்மன்யாசரேத் । ஸர்வேஷு வேதேஷு ஆருணமாவர்த்தயேத் உபநிஷதமாவர்த்தயேத் உபநிஷதமாவர்த்தயேத் । கல்வஹம் ப்ரஹ்மஸூத்ரம் ஸூசனாத் ஸூத்ரம் ப்ரஹ்மஸூத்ரமஹமேவ வித்யாத் । த்ரிவ்ருத்ஸூத்ரம் த்யஜேத் வித்வான் ய ஏவம் வேத ॥ 2 ॥

ஸந்ந்யஸ்தம் மயா ஸந்ந்யஸ்தம் மயா ஸந்ந்யஸ்தம் மயா இதி த்ரிருக்த்வா அபயம் ஸர்வ பூதேப்ப்யோ மத்த: ஸர்வம் ப்ரவர்த்ததே । ஸகா மா கோபாயௌஜ: ஸகா மா கோபாயோஸீந்த்ரஸ்ய வஜ்ரோऽஸி வார்த்ரக்க்ன: சமே மே பவ யத்பாபம் தந்நிவாரய இத்யனேன மந்த்ரேண க்ருதம் வைணவம் தண்டம் கௌபீனம் பரிக்ரஹேத் । ஔஷத மசனவதாசரேத் ஔஷத- மசனம் ப்ராச்னீயாத் யதாலாப- மச்னீயாத் । ப்ரஹ்மசர்ய - மஹிம்ஸாஞ்ச அபரிக்ரஹஞ்ச ஸத்யஞ்ச யத்னேன ஹே ரக்ஷத ஹே ரக்ஷத ஹே ரக்ஷத இதி ॥ 3 ॥

---

3. 'ஸந்ந்யஸ்தம் மயா ஸந்ந்யஸ்தம் மயா ஸந்ந்யஸ்தம் மயா' என்ருல் அனைத்தும் துறக்கப்பட்டது என்று மூன்று தடவை உச்சரித்து, 'எல்லா உயிர்களுக்கும் அபயமளிக்கிறேன், என்னிடமிருந்தே எல்லாம் உண்டாகிறது' என்றும் சொல்லவும். 'என்னைக் காப் பாற்றும் நண்பனுகவும், இந்திரனுடைய வஜ்ரம்போல் துன்பங்களைப் போக்குபவனுகவும், அமைதியைத் தருபவனுகவும் நீ இரு, எது பாவமோ அதை

दण्डं कौपिनं परिग्रहेत् । औषधमशनवदाचरेत् औषधवदशनं प्राश्नीयात् यथालाभमश्नीयात् । ब्रह्मचर्यमहिंसांच अपरिग्रहं च सत्यं च यत्नेन हे रक्षथ हे रक्षथ हे रक्षथ इति ।। ३ ।।

अथातः परमहंस परिव्राजकाना-मासन-शयनाभ्यां भूमौ ब्रह्मचारिणाम् । मृत्पात्रं वा अलाबु पात्रं दारुपात्रं वा । कामक्रोध- लोभमोह-दंभदर्पेच्छासूया ममत्वाहंकारादीनपि त्यजेत् । वर्षासु ध्रुवशीलोऽष्टौमासानेकाकी यतिश्चरेत् । द्वौवा चरेत् द्वौवा चरेत् । स खलु एवं यो विद्वान् सोपनयनादूर्ध्वं एतानि प्राम्श्वा त्यजेत् । पितरं पुत्रमग्न्युपवीतं कर्म कलत्रं चान्यदपीह ।। ४ ।।

यतयो भिक्षार्थं ग्रामं प्रविशन्ति पाणिपात्रं उदरपात्रं वा । ओं हि ओं हि ओं हि इत्युपनिषदं विन्यसेत् । पालाशं बैल्वं औदुम्बरं दण्डं मौंजीं

---

என்னிடமிருந்து விலக்கு' என்று இந்த மந்திரத்தால் ஒரு மூங்கில் தண்டத்தை எடுத்துக்கொள். கௌபீனத்தை தரித்துக்கொள். மருந்தைப்போல் (அளவுடன்) ஆகாரத்தைக்கருது. மருந்தைப்போல எது கிடைக்கிற தோ அதைச் சாப்பிடு. பிரம்மசர்யம், அஹிம்ஸை, அபரிக்ரஹம் (ஏலாமை, எதையும் சேர்த்துவைத்துக் கொள்ளாமை), ஸத்தியம் ஆகிய விரதங்களை நன்மு யற்சியுடன், ஸாதுவே, காப்பாற்று, காப்பாற்று, காப் பாற்று.

4. பரமஹம்ஸ பரிவ்ரஜ்ஜாஜகர்களுக்கும் பிரம்மசாரிக ளுக்கும் ஆஸனம் படுக்கை எல்லாம் தரையிலேயே.

அதாத: பரமஹம்ஸ- பரிவ்ராஜகாணு -மாஸன-
சயனுப்ப்யாம் பூமௌ ப்ரஹ்மசாரிணும் ।
ம்ருத்பாத்ரம் வா அலாபு பாத்ரம்
தாருபாத்ரம் வா । காமக்ரோத- லோப- மோஹ-
தம்ப-தர்ப்பேச்சாஸூயா மமத்வாஹங்காரா
தீனபி த்யஜேத் । வர்ஷாஸு த்த்ருவ
சீலோSஷ்டௌ மாஸானேகாகீ யதிச்சரேத் ।
த்வௌவா சரேத் த்வௌவா சரேத் । ஸ கலு
ஏவம் யோ வித்வான் ஸோபநயனுதூர்த்த்வம்
ஏதானி ப்ராக்வா த்யஜேத் । பிதரம் புத்ர-
மக்ன்யுபவீதம் கர்ம கலத்ரஞ்சான்யதபீஹ ॥ 4 ॥

யதயோ பிக்ஷார்த்தம் க்ராமம் ப்ரவிசந்தி
பாணிபாத்ரம் உதரபாத்ரம் வா । ஓம் ஹி ஓம்
ஹி ஓம் ஹி இத்யுபநிஷதம் வின்யஸேத் ।
। பாலாசம் பைல்வம் ஔதும்பரம் தண்டம்
மௌஞ்ஜீம் மேகலாம் யஜ்ஞோபவீதஞ்ச

---

மண் பாத்திரமோ சுரைக்காய்ப் பாத்திரமோ மரப்பாத்திரமோ (வைத்துக்கொள்ளலாம்). காமம், கோபம், உலோபம், மோகம், இடம்பம், கொழுப்பு, ஆசை, பொறாமை, மமகாரம், அஹங்காரம் முதலியவற்றை ஒழிக்க வேண்டும். மழைகாலம் (நாலுமாதம்) சஞ்சாரம் செய்யக் கூடாது. மீதி எட்டுமாதங்கள் யதியானவன் (ஒரிடத்திலிராமல்) தானொருவனுகச் சஞ்சரித்துக் கொண்டிருக்க வேண்டும். சாதுர்மாஸ்யம் 4 பக்ஷம் அல்லது இரண்டு மாதமாவது கைக்கொள்ள் வேண்டும். உபநயனத்திற்குப் பின்போ அல்லது முன்போ கூட ஞான மடைந்தவன் எவனே அவன் இவ்வாறு துறக்கலாம். தந்தை, தனயன், அக்னி, உபவீதம், கர்மா, களத்ரம் மற்றும் அனைத்தையும் (துறக்க வேண்டும்).

मेखलां यज्ञोपवीतं च त्यक्त्वा शूरो य एवं वेद । तद्विष्णोः परमं पदं सदा पश्यन्ति सूरयः । दिवीव चक्षुराततम् । तद्विप्रासो विपन्यवो जागृवांसः समिन्धते । विष्णोर्यत्परमं पदम् ।। एवं निर्वाणानुशासनं वेदानुशासनं वेदानुशासन इत्युपनिषत् ।। ५ ।।

---

5. ஸந்நியாஸி கையையே பாத்திரமாகக் கொண்டோ வயிற்றையே பாத்திரமாகக் கொண்டோ கிராமத்தில் பிச்சை புக வேண்டும். 'ஓம் ஹி ஓம் ஹி ஓம் ஹி' என்ற உபநிஷத் மந்திரத்தை ஜபிக்க வேண்டும். இப்படி அறிந்தவனுக்கு இதுவே யக்ஞோபவீதம். பலாசமோ பில்வமோ அத்தியோ எதுவாயிருந்தாலும் (பிரம்மசரிய ஆசிரமத்தில் கைக் கொண்ட) தண்டத்தையும் முஞ்ஜிப்புல் அரைஞாணையும் பூணூலையும் இங்ஙன மறிந்த வீரன் துறக்க வேண்டும். (அதுதான் பரமபதம். அதைப்பற்றியது பின்வரும் மந்திரம்). அது விஷ்ணுவின் பரமபதம். அதை தேவலோகத்தில் கண் கொட்டாமல் பார்ப்பதுபோல் ஞானிகள் எப்பொழுதும் மலர்ந்த கண் கொண்டு பார்க்கிறார்கள். ஆசையை வென்ற ஸாதகர்கள் எப்பொழுதும் விழிப்புடையவர்களாய் இந்த விஷ்ணு பதத்தை நாடுகிறார்கள்.

இது வேதத்தின் கட்டளை, வேதத்தின் கட்டளை.

உபநிஷத்தின் விஷயச்சுருக்கம் :-

ஸந்நியாஸ லக்ஷணத்தைப் பற்றி பிரஜாபதியின் உபதேசம். பிரம்மசரிய ஆசிரமத்திலிருந்தோ, கிருஹஸ்தாசிரமத்திலிருந்தோ வானப்பிரஸ்தாசிரமத்திலிருந்தோ எப்போது ஞானமும் வைராக்கியமும் ஏற்படுகிறதோ அப்போது துறவு பூணவேண்டும். உபாசித்துவந்த அக்னிகளை வயிற்றிலுள்ள ஜாடராக்னியி

த்யக்த்வா சூரோ ய ஏவம் வேத।
தத் விஷ்ணோ; பரமம் பதம் ஸதா பச்யந்தி ஸூரய:। திவீவ சக்ஷுராததம்। தத்விப்ராஸோ விபன்யவோ ஜாக்ருவாம்ஸ: ஸமிந்த்ததே।
விஷ்ணோர்யத்பரமம் பதம்।
ஏவம் நிர்வாணானுசாஸனம் வேதானுசாஸனம் வேதானுசாஸன -மித்யுபநிஷத் ॥ 5 ॥

லும், காயத்திரியை வாக்காகிற அக்னியிலும் ஸமாரோபணம் செய்து விட்டு மூன்று ஸந்திகளிலும் ஸ்நானம் செய்து ஆத்மாவில் ஸமாதிகூட வேண்டும். வேதங்களில் ஆரணியப்பகுதியையும் உபநிஷதங்களையும் பாராயணம் செய்ய வேண்டும். பிரம்மசரியம், அஹிம்ஸை, அபரிக்ரஹம் (ஏலாமை) ஸத்தியம் ஆகிய விரதங்களைக் கைக் கொள்ள வேண்டும். படுக்கை தரை; பாத்திரம் மண்ணாலானதோ மரத்தினாலானதோ. காமம், கோபம், லோபம், மதம், மாச்சரியம், அஹங்காரம், மமகாரம் ஆகியவற்றை ஒழிக்க வேண்டும். மழைக்காலம் மட்டும் சஞ்சாரமில்லாமலிருந்து மற்ற காலங்களில் ஒரிடத்தில் வசிக்காமல் சஞ்சரித்துக் கொண்டே இருக்க வேண்டும். தந்தை, தனயன், அக்னி, உபவீதம், கர்மா, களத்ரம், மற்றும் அனைத்தையும் துறக்க வேண்டும். 'ஓம்' என்ற உபநிஷத் மந்திரத்தை எப்பொழுதும் ஜபம் செய்ய வேண்டும். அதுதான் முக்திக்குவழி.

இங்ஙனம் ஆருண்யுபநிஷத்து முற்றும்

---

# ॥ गर्भोपनिषत् ॥ १७ ॥

ओं सहनाववतु ।+ ओं शान्तिः शान्तिः शान्तिः ॥
पंचात्मकं पंचसु वर्तमानं षडाश्रयं षड्गुणयोगयुक्तम् ।
तं सप्तधातुं त्रिमलं द्वियोनिं चतुर्विधाहारमयं शरीरं भवति ॥
पंचात्मकमिति कस्मात् । पृथिव्यापस्तेजो वायुराका-
शमिति । अस्मिन् पंचात्मके शरीरे का पृथिवी का
आपः किं तेजः को वायुः किं आकाशमिति । अस्मिन्
पंचात्मके शरीरे तत्र यत्कठिनं सा पृथिवी यद्द्रवं ता
आपः यदुष्णं तत्तेजः यत्संचरति स वायुः यत्सुषिरं
तदाकाशमित्युच्यते । तत्र पृथिवी धारणे आपः

---

## 17. கர்ப்போபநிஷத்து

*உபநிஷத்தின் பெயரும் தொடர்பும்:-*

இவ்வுபநிஷத்து கிருஷ்ணயஜுர் வேதத்தைச் சேர்ந்தது. கர்ப்பத்தில் உடல் தோன்றிவளர்வதையும் அதில் உறையும் ஜீவனுடைய நிலை அப்பொழுது எப்படிப்பட்டது என்பதையும் இது விளக்குவதால் இதற்கு கர்ப்போபநிஷத்து என்ற பெயர் பொருந்துவதாயிற்று.

1. ஓம். (குருசிஷ்யர்களாகிய எங்களை) இருவரையும் சேர்த்து (பிரம்மம்) காப்பாற்றட்டும் + முவ்வகையிலும் சாந்தி நிலவுக.

சரீரம் ஐந்து பொருளாலாகி ஐந்தில் நிலைபெறுவது; ஆறு ஆசிரயமுடையது, ஆறு குணங்களுடன், கூடியது; ஏழுதாதுக்களும், மும்மலங்களும், இரண்டு யோநிகளும் (பிறப்பிடமும்) உடையது. நாலு விதமான ஆகாரமயமானது. (1) பஞ்சாத்மகம் என்

## கர்ப்போபநிஷத் ॥ 17 ॥

ஓம் ஸஹநாவது । + ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ॥
பஞ்சாத்மகம் பஞ்சஸு வர்த்தமானம் ஷடாச்ரயம் ஷட்குணயோக- -யுக்தம் । தம் ஸப்த- தாதும் த்ரிமலம் த்வியோநிம் சதுர்விதாஹார- மயம் சரீரம் பவதி ॥
பஞ்சாத்மகமிதி கஸ்மாத் ।
ப்ருதிவ்யாபஸ்தேஜோ- வாயு- ராகாசமிதி ।
அஸ்மின் பஞ்சாத்மகே சரீரே கா ப்ருதிவீ கா ஆப: கிம் தேஜ: கோ வாயு: கிம் ஆகாசமிதி ।
அஸ்மின் பஞ்சாத்மகே சரீரே தத்ர யத் கடினம் ஸா ப்ருதிவீ யத் த்ரவம் தா ஆப: யதுஷ்ணம் தத்தேஜ: யத்ஸஞ்சரதி ஸ வாயு: யத்ஸுஷிரம் ததாகாச- மித்யுச்யதே । தத்ர ப்ருதிவீ தாரணே ஆப: பிண்டீகரணே தேஜ: ப்ரகாசனே வாயுர்வ்யூஹனே ஆகாசமவகாச-ப்ரதானே ।

---

பது ஏன்? பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்ற ஐந்து பொருளாலாகியிருப்பதால், (2) அதில் எது பிருதிவி, எது அப்பு, எது தேயு, எது வாயு எது ஆகாயம் என்றால் எது கடினப்பகுதியோ அது பிருதிவி, எது திரவப்பகுதியோ அது அப்பு, எது உஷ்ணமோ அது தேயு, எது சலிக்கிறதோ அது வாயு, எது இடம் கொடுக்கிறதோ அது ஆகாயம். அவற்றுள் பிருதிவி தாங்குவது, அப்பு பிண்டமாக்கு வது, தேயு பிரகாசப்படுத்துவது, வாயு கூட்டத்தை இயக்குவது, ஆகாயம் அவகாசமளிப்பது. தனித்தனி யாகக் காது சப்தத்தைக் கேட்கவும், த்வக் ஸபர்சத்தை உணரவும், கண்கள் ரூபத்தைப் பார்க்கவும், நாக்கு ரஸத்தை அறியவும் மூக்கு முகரவும், உபஸ்த்தம் ஆனந்த மனுபவிக்கவும், அபானம் மலத்தைக் கழிக் கவும் ஏற்பட்டனவாகும். புத்தியால் ஜீவன் அறிகி

पिण्डीकरणे तेजः प्रकाशने वायुर्व्यूहने आकाशमवकाशप्रदाने । पृथक् श्रोत्रं शब्दोपलब्धौ त्वक् स्पर्शे चक्षुषी रूपे जिह्वा रसने नासिका घ्राणे उपस्थ आनन्दने अपान उत्सर्गे बुद्ध्या बुध्यति मनसा संकल्पयति वाचा वददि ।। षडाश्रयमिति कस्मात् । मधुराम्ल-लवण-तिक्त-कटुकषाय रसान् विन्दतीति । षड्ज ऋषभ-गान्धार-मध्यम-पंचम-धैवत-निषादाश्चेति इष्टानिष्टशब्दसंज्ञाः प्रणिधानाद्दशविधा भवन्ति । शुक्लो रक्तः कृष्णो धूम्रः पीतः कपिलः पाण्डर इति ।। १ ।।

सप्तधातुकमिति कस्मात् । यदा देवदत्तस्य द्रव्यादि विषया जायन्ते । परस्परं सौम्यगुणत्वात् षड्विधो रसो रसाच्छोणितं शोणितान्मांसं मांसान्मेदो मेदसः स्नायवः स्नायुभ्योऽस्थीनि अस्थिभ्यो मज्जा मज्जातः शुक्रं ।। शुक्रशोणितसंयोगादावर्तते गर्भो हृदि व्यवस्थां नयति

---

றான், மனதால் ஸங்கல்பம் செய்கிறுன், வாக்கால் பேசுகிறான், 3) ஆறு ஆசிரயம் என்றது எதனுல்? இனிப்பு, புளிப்பு, உப்பு, கைப்பு, காரம், துவர்ப்பு, என்ற ரஸங்களே உணர்வதால் ஷட்ஜம் ருஷபம், காந்தாரம், மத்தயமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்ற ஏழு ஒலிகளும் இஷ்டம், அநிஷ்டம், ப்ரணி தானம் என்பவற்றுடன் சப்தம் பத்து விதமாகிறது. வெண்மை, சிவப்பு, கருப்பு, புகைவர்ணம், மஞ்சள், பொன்நிறம் சேர்ந்த வெளுப்பு என வர்ணங்கள் ஏழு.

ப்ருதக் ச்ரோத்ரம் சப்தோபலப்தௌ । த்வக் ஸ்பர்சே சக்ஷுஷீ ரூபே ஜிஹ்வா ரஸனே நாஸிகா க்ராணே உபஸ்த்த ஆனந்தனே அபான உத்ஸர்க்கே புத்த்யா புத்த்யதி மனஸா ஸங்கல்பயதி வாசா வததி ॥ ஷடாச்ரயமிதி கஸ்மாத் । மதுராம்ல - லவண- திக்த- கடு கஷாய ரஸான் விந்ததீதி । ஷட்ஜ-ருஷப- காந்தார- மத்த்யம- பஞ்சம- தைவத- நிஷாதாச்சேதி இஷ்டானிஷ்ட- சப்தஸம்ஜ்ஞா: ப்ரணிதானுத் தசவிதா பவந்தி । சுக்லோ ரக்த: க்ருஷ்ணோ தூம்ர: பீத: கபில: பாண்டர இதி ॥ 1 ॥

ஸப்த தாதுக- மிதி கஸ்மாத் । யதா தேவதத்தஸ்ய த்ரவ்யாதி விஷயா ஜாயந்தே । பரஸ்பரம் ஸௌம்ய -குணத்வாத் ஷட்விதோ ரஸோ ரஸாச்சோணிதம் சோணிதான் மாம்ஸம், மாம் ஸான் மேதோ, மேதஸ: ஸ்நாயவ:, ஸ்நா யுப்ப்யோ Sஸ்த்தீனி அஸ்த்திப்ப்யோ மஜ்ஜா, மஜ்ஜாத: சுக்ரம் । சுக்ரசோணித- ஸம்யோ காதாவர்த்ததே கர்ப்போ ஹ்ருதி வ்யவஸ்த்தாம் நயதி ஹ்ருதயே Sந்தராக்னி: அக்னிஸ்த்தானே பித்தம் பித்தஸ்த்தானே வாயு: வாயுதோ ஹ்ருதயம் ப்ராஜாபத்யாத் க்ரமாத் ॥ 2 ॥

---

2. ஏழு தாதுக்கள் என்பது எதனுல்? எப்போது தேவ தத்தன் என்ற (யாரோ ஒரு) மனிதனுக்கு விஷய போகத்திற்குரிய திரவியங்கள் உண்டாகின்றனவோ, அப்போது அவற்றின் கூட்டுறவின் நல்ல குணத்தால் ஆறுவிதமான ரஸங்கள் தோன்றுகின்றன. ரஸத்தி லிருந்து ரத்தம், ரத்தத்திலிருந்து மாம்ஸம், மாம்ஸத் திலிருந்து கொழுப்பு, கொழுப்பிலிருந்து, நரம்புகள், நரம்புகளிலிருந்து எலும்புகள், எலும்புகளிலிருந்து,

हृदयेऽन्तराग्निः अग्निस्थाने पित्तं पित्तस्थाने वायुः वायुतो हृदयं प्राजापत्यात् क्रमात् ॥ २ ॥

ऋतु काले संप्रयोगादेकरात्रोषितं कलिलं भवति सप्तरात्रोषितं बुद्बुदं भवति अर्धमासाभ्यन्तरेण पिण्डो भवति । मासाभ्यन्तरे कठिनो भवति मासद्वयेन शिरः संपद्यते । मासत्रयेण पादप्रदेशो भवति । अथ चतुर्थे मासे गुल्फ-जठर- कटि प्रदेशा भवन्ति । पंचमे मासे पृष्ठवंशो भवति । षष्ठे मासे मुखनासिका-क्षिश्रोत्राणि भवन्ति । सप्तमे मासे जीवेन संयुक्तो भवति । अष्टमे मासे सर्वलक्षणसंपूर्णो भवति । पितू रेतोऽतिरेकात्पुरुषो मातू रेतोऽतिरेकात् स्त्री । उभयोर्बी-जतुल्यत्वात् नपुंसको भवति । व्याकुलितमनसोऽन्धाः खंजाः कुब्जा वामना भवन्ति । अन्योन्यवायु परिपीडित-शुक्रद्वैविध्यात् तनुस्यात्ततो युग्माः प्रजायन्ते । पंचात्मकः समर्थः पंचात्मिका चेतसा बुद्धि-गन्ध-रसादिज्ञानात् क्षराक्षरमोंकारं चिन्तयतीति तदेतदेकाक्षरं ज्ञात्वाष्टप्रकृतयः षोडश विकाराः शरीरे तस्यैव देहिनः ॥

---

ஊன், ஊனிலிருந்து சுக்ரம். இப்படி ஏழு தாதுக்கள். அவற்ருலானது சரீரம். சுக்ரமும், சோணிதமும் சேர்வதால் கர்ப்பம் உண்டாகிறது. அதை இயக்குமிடம் இருதயம். இருதயத்தினுள் ஒரு அக்னிஉளது. அதில் பித்தமும், பித்தத்தினின்று வாயுவும் தோன்றுகின்றன; அந்த வாயு மீண்டும் கிரமமாக இருதயத்தை நாடுகிறது. இது மக்களை ஆளும் ஆண்டவனுடைய நியதி.

ருதுகாலே ஸம்ப்ரயோகாத் ஏக ராத்ரோஷிதம் கலிலம் பவதி ஸப்தராத்ரோஷிதம் புத்புதம் பவதி அர்த்தமாஸாப்ப்யந்தரேண பிண்டோ பவதி। மாஸாப்ப்யந்தரே கடினோ பவதி, மாஸத்வயேன சிர: ஸம்பத்யதே ।மாஸத்ரயேண பாதப்ரதேசோ பவதி। அத சதுர்த்தே மாஸே குல்ப- ஜடர- கடி- ப்ரதேசா பவந்தி।பஞ்சமே மாஸே ப்ருஷ்ட்டவம்சோ பவதி। ஷஷ்ட்டே மாஸே முக-நாஸிகாக்ஷி -ச்ரோத்ராணி பவந்தி। ஸப்தமே மாஸே ஜீவேன ஸம்யுக்தோ பவதி। அஷ்டமே மாஸே ஸர்வலக்ஷண -ஸம்பூர்ணோ பவதி। பிதூரேதோऽதிரேகாத் புருஷோ மாதூரேதோ ऽதிரேகாத் ஸ்த்ரீ।உபயோர் பீஜ துல்யத்வாத் நபும்ஸகோ பவதி। வ்யாகுலித மனஸோ ऽந்த்தா: கஞ்ஜா: குப்ஜா வாமனா

---

3. ருதுகால ஸம்போகத்தால் ஓரிரவு கழித்ததும் கரு வானது கலங்குகிறது. ஏழிரவுகளில் நீர்க்குமிழி போன்ற உருவத்தை அடைகிறது. அரைமாதத்தில் பிண்டமாகிறது. ஒரு மாதத்தில் அது கடினமாகிறது. இரண்டு மாதங்களில் தலை தோன்றுகிறது. மூன்று மாதங்களில் பாதங்களின் பிரதேசம் தோன்றுகிறது. நாலாவது மாதத்தில் மணிக்கட்டு வயிறு, இடுப்பு முதலிய பிரதேசங்கள் உண்டாகின்றன. ஐந்தாவது மாதத்தில் பின்புறம் (மூங்கில் போன்ற முதுகு) எலும்பு உண்டாகிறது. ஆறுவது மாதத்தில் வாய் மூக்கு கண்கள் காதுகள் உண்டாகின்றன. ஏழாவது மாதத்தில் ஜீவனுடன் கூடுகிறது. எட்டாவது மாதத்தில் எல்லா லக்ஷணங்களும் பூர்த்தியாகின்றன. தந்தையின் வீரியம் அதிகமாயிருந்தால் புருஷனாகவும், தாயின் வீரியம் மேம்பட்டிருந்தால் ஸ்திரீயாகவும், இரண்டும் சமமானால் அலியாகவும் ஆகிறது. மனக்

உ-11

अथ मात्राशित पीत नाडी सूत्र गतेन प्राण आप्यायते । अथ नवमे मासि सर्वलक्षण-ज्ञान-करण संपूर्णो भवति । पूर्वजातिं स्मरति । शुभाशुभं च कर्म विन्दति ॥ ३ ॥

पूर्वयोनि-सहस्राणि दृष्ट्वा चैव ततो मया । आहारा विविधा भुक्ताः पीता नानाविधाः स्तनाः । जातश्चैव मृतश्चैव जन्म चैव पुनः पुनः । यन्मया परिजनस्यार्थे कृतं कर्म शुभाशुभम् । एकाकी तेन दह्येहं गतास्ते फलभोगिनः । यदि योन्याः प्रमुच्येऽहं तत्प्रपद्ये महेश्वरम् । अशुभक्षयकर्तारं फलमुक्तिप्रदायकम् ।

---

கலக்கத்தால் குருடர்களாகவும் முடவர்களாகவும் கூனர் களாகவும், குள்ளர்களாகவும் பிறக்கிறார்கள். ஒன்றுக் கொன்று வாயுவால் பீடிக்கப்பட்டு சுக்லம் இரண்டு பட்டால் அப்போது இரட்டைப்பிள்ளைகள் பிறக்கிறார் கள். பஞ்சபூத வடிவான சரீரம் ஸாமர்த்திய முடை யதாகும் போது ஐந்து ஞானேந்திரியங்களும் புத்தியும் அதனால் கந்தம், ரஸம் முதலியவற்றை அறியும் திறமையும் உண்டாகின்றன. அப்பொழுது அந்த ஜீவன் அழியாத் அக்ஷரமாகிய ஓங்காரப் பொருளைச் சிந்திக்கிறான். அந்த ஓரெழுத்தை உணர்ந்ததும் (பஞ்சபூதங்கள், மனம், புத்தி, அஹங்காரம்) என்ற எட்டு பிரகிருதிகளும் அவற்றின் பதினாறு விகாரங்க ளும் தேகத்தில் அதை உடைய தேகியாகிய ஜீவனு டையவை ஆகின்றன என்பதும் உணரப்படுகிறது. தாயார்உண்டதும் பருகியதும் தாயுடன் இணைந்த நாடிகளில் பரவி அதன்மூலம் குழந்தையின் பிராணன் திருப்தியடைகிறது. பிறகு ஒன்பதாவது மாதத்தில் எல்லா லக்ஷணங்களும் ஞானேந்திரியங்களும் கர் மேந்திரியங்களும் பரிபூர்ண நிலையை எய்துகின்றன.

பவந்தி। அன்யோன்ய வாயு பரிபீடித- சுக்ர- த்வைவித்யாத் தனுஸ்யாத்ததோ யுக்மா: ப்ரஜாயந்தே। பஞ்சாத்மக: ஸமர்த்த: பஞ்சாத்மிகா சேதஸா புத்தி- கந்த்த- ரஸாதிஜ்ஞானுத் க்ஷராக்ஷர- மோங்காரம் சிந்தயதீதி ததேததேகாக்ஷரம் ஜ்ஞாத்வா ஷ்டப்ரக்ருதய: ஷோடச விகாரா: சரீரே தஸ்யைவ தேஹின:। அத மாத்ராசித- பீத நாடீ ஸூத்ர கதேன ப்ராண ஆப்யாயதே। அத நவமே மாஸி ஸர்வலக்ஷண- ஜ்ஞான- கரண ஸம்பூர்ண்ணே பவதி। பூர்வ ஜாதிம் ஸ்மரதி சுபா சுபஞ்ச கர்ம விந்ததி ॥3॥

பூர்வயோநி- ஸஹஸ்ராணி த்ருஷ்ட்வா சைவ ததோ மயா। ஆஹாரா விவிதா புக்தா: பீதா நானுவிதா: ஸ்தனு:। ஜாதச்சைவ ம்ருதச்சைவ ஜன்ம சைவ புன: புன:। யன் மயா பரி- ஜனஸ்யார்த்தே க்ருதம் கர்ம சுபாசுபம்। ஏகாகீ தேந தஹ்யே Sஹம் கதாஸ்தே பலபோகின:।

---

அப்பொழுது அந்த ஜீவனுக்கு முந்திய பிறவியின் ஞாபகம் உதிக்கிறது. தான் செய்த புண்ணியச் செயல்களையும் பாவச் செயல்களையும் உணர்கிறது.

4. என்னுல் முன்பு ஆயிரக்கணக்கான யோனிகள் பார்க்கப்பட்டும் பலவிதமான ஆகாரங்கள் புசிக்கப் பட்டும் பலவிதமான ஸ்தன்ய பானங்கள் (தாய்ப்பால்) பருகப்பட்டும் ஆகிவிட்டன. திரும்பத் திரும்பப் பிறந் தும் இறந்துமாயிற்று. நல்லதோ பொல்லாததோ எந்தக்கருமம் எந்தச் சுற்றத்தின் பொருட்டு என்னுல் செய்யப்பட்டதோ அந்தச் சுற்றத்தார் பயனே அனுப வித்து விட்டுப்போய் விட்டார்கள். நானே தன்னந் தனியனுக அதனுல் தவிக்கிறேன். யோனியினின்று

यदि योन्याः प्रमुच्येऽहं तत्प्रपद्ये नारायणम् । अशुभ-क्षयकर्तारं फलमुक्तिप्रदायकम् । यदि योन्याः प्रमुच्येऽहं तत्सांख्यं योगमभ्यसे । अशुभक्षय-कर्तारं फलमुक्ति-प्रदायकम् । यदि योन्याः प्रमुच्येऽहं ध्याये ब्रह्म सनातनम् । अथ योनिद्वारं संप्राप्तो यन्त्रेणापीड्यमानो महता दुःखेन जातमात्रस्तु वैष्णवेन वायुना संस्पृष्टस्तदा न स्मरति जन्ममरणानि न च कर्म शुभाशुभं विन्दति ॥ ४ ॥

शरीरमिति कस्मात् । अग्नयोह्यत्र श्रियन्ते ज्ञानाग्नि -र्दर्शनाग्निः कोष्ठाग्निरिति । तत्र कोष्ठाग्नि-र्नामाशित-पीत-लेह्य-चोष्यं पचति । दर्शनाग्नी

---

வெளிவந்தால் இனி நான் பாவத்தைப் போக்குபவரும் கருமப்பயனிலிருந்து முக்தியளிப்பவருமான மஹேசு வரனை நாராயணனை சரணடையப் போகிறேன். யோனியினின்று வெளிவந்தால் இனி நான் பாவத்தைப் போக்குவதும் கருமப் பயனிலிருந்து விடுதலை அளிப் பதுமான ஸாங்க்ய (ஞான) யோகத்தை அப்பியாஸம் செய்யப்போகிறேன். யோனியினின்று வெளிவந்தால் ஸநாதனப் பிரம்மத்தை தியானிக்கப் போகிறேன் — என்றிவ்வாறு என்ணுகிருன்.

பிறகு யோனித்துவாரத்தை அடைந்து இயந்திரத் தால் பீடிக்கப் பட்டவனைப்போல் மிகுந்த துன்பத் திற்குள்ளாகிப் பிறந்தவுடன் விஷ்ணு மாயா வாயுவால் தொடப்பட்டு அப்பொழு நினைவிழந்து பிறப்பிறப் பையோ புண்ணிய பாபச்செயல்களையோ எதையும் அறிவதில்லை.

யதியோன்யா: ப்ரமுச்யே Sஹம் தத் ப்ரபத்யே மஹேச்வரம் । அசுப- க்ஷயகர்த்தாரம் பலமுக்திப்ரதாயகம் ॥ யதி யோன்யா: ப்ரமுச்யே Sஹம் தத் ப்ரபத்யே நாராயணம் । அசுபக்ஷய கர்த்தாரம் பலமுக்திப்ரதாயகம் ॥ யதி யோன்யா: ப்ரமுச்யே Sஹம் தத் ஸாங்க்யம் யோக- மப்ப்ய ஸே । அசுபக்ஷய கர்த்தாரம் பலமுக்திப்ரதாயகம் ॥ யதி யோன்யா: ப்ரமுச்யே Sஹம் த்த்யாயே ப்ரஹ்ம ஸநாதனம் ॥ அத யோநித்வாரம் ஸம் ப்ராப்தோ யந்த்ரேணுபீட்யமானே மஹதா துக்கேன ஜாதமாத்ரஸ்து வைஷ்ணவேன வாயுனு ஸம்ஸ்ப்ருஷ்டஸ் ததா ந ஸ்மரதி ஜன்ம -மரணனி ந ச கர்ம சுபாசுபம் விந்ததி ॥ 4 ॥

சரீரமிதி கஸ்மாத் । அக்னயோஹ்யத்ர ச்ரியந்தே ஜ்ஞானக்னிர்- தர்சனக்னி: கோஷ்ட்டாக்னிரிதி । தத்ர கோஷ்ட்டாக்னிர் நாமாசித- பீத- லேஹ்ய- சோஷ்யம் பசதி । தர்சனக்னீ ரூபாணும் தர்சனம் கரோதி । ஜ்ஞானக்னி: சுபா சுபஞ்ச கர்ம விந்ததி ।

---

6. சரீரம் எனும் பெயர் எக்காரணத்தால்? ஞானக்னி, தர்சனக்னி, கோஷ்டாக்னி என்ற அக்னிகள் இதை ஆசிரயித்திருப்பதால் (இதற்கு சரீரம் எனப்பெயர் பொருந்துவதாயிற்று). அவற்றுள் கோஷ்டாக்னி என் பது உண்டது பருகியது லேஹ்யம் சோஷ்யம் எல்லா வற்றையும் (வயிற்றில் மீண்டும்) சமைத்து (உடலில் சேர்க்கப்) பக்குவப்படுத்துவது. தர்சனக்னி ரூபங்களைக் காண்பது. ஞானக்னி என்பது நல்லதையும் பொல்லா ததையும் பகுத்தறிவது. முகத்தில் ஆஹவநீயாக்னியா கவும், வயிற்றில் கார்ஹபத்யாக்னியாகவும், இருதயத் தில் தக்ஷிணக்னியாகவும் அம்மூன்றும் இடங் கொண்டுள்ளன. (அவ்வக்னிகளில் உடலில் இடைவி டாது யாகம் நடைபெறுகிறது. அந்தயாகத்தின் அங் கங்கள் பின்வருமாறு).

रूपाणां दर्शनं करोति । ज्ञानाग्निः शुभाशुभं च कर्म विन्दति । त्रीणि स्थानानि भवन्ति मुखे आहवनीय उदरे गार्हपत्यो, हृदि दक्षिणाग्निः, आत्मा यजमानो, मनो ब्रह्मा, लोभादयः पशवो धृतिर्दीक्षा सन्तोषश्च बुद्धीन्द्रियाणि यज्ञपात्राणि, हवींषि कर्मेन्द्रियाणि, शिरः कपाल, केशा दर्भा, मुखमन्तर्वेदिः, चतुष्कपालं शिरः, षोडश पार्श्व-दन्तपटलानि, सप्तोत्तरं मर्म शतं, साशीतिकं सन्धिशतं सनवकं स्नायुशतं, सप्त सिराशतानि, पंच मज्जाशतानि, अस्थीनि च ह वै त्रीणि शतानि षष्टीः, सार्ध चतस्रो रोमाणि कोटयो हृदयं पलान्यष्टौ, द्वादशपला जिह्वा, पित्तप्रस्थं कपस्याढकं, शुक्रकुडवं, मेदः प्रस्थौ, द्वावनियतं मूत्रपुरीष-माहारपरिमाणात् । पैप्पलादं मोक्षशास्त्रं पैप्तलादं मोक्ष शास्त्रमिति ॥ ५ ॥

---

ஆத்மா யஜமானன் (யாகம் செய்பவன்). மனது பிரம்மா, உலோபம் (காமம் கோபம்) முதலியவை யாகத்தில் பலியாக வேண்டிய பிராணிகள். மனோ திடம் தீக்ஷை. மனநிறைவும் ஞானேந்திரியங்களும் யாகப் பாத்திரங்கள். கர்மேந்திரியங்கள் ஹோமம் செய்யப்படும் ஹவிஸ் (அன்னம்). தலை கபாலம் எனும் பாத்திரம். தலைமயிர் தர்ப்பை. முகம் உட்பு றமுள்ள யாகமேடை. தலை சதுஷ்கபாலம். இரண்டு வரிசைப்பற்களும் ஷோடச கபாலம்.

யாகத்தில் பயன்படும் மற்ற பொருள்களாகவும் இடங்களாகவும் எலும்பு, நரம்பு, சதை முதலியவை கருதப்படுகின்றன. மர்மஸ்தானங்கள் நூற்றேழு. ஸந்

த்ரீணி ஸ்த்தானனி புவந்தி முகே ஆஹவநீய உதரே கார்ஹபத்யோ, ஹ்ருதி தக்ஷிணக்னி:, ஆத்மா யஜமானே, மனே ப்ரஹ்மா, லோபாதய: பசவோ, த்ருதிர் தீக்ஷா, ஸந்தோஷச்ச புத்தீந்த்ரியாணி யஜ்ஞபாத்ராணி, ஹவீம்ஷி கர்மேந்த்ரியாணி, சிர: கபால, கேசாதர்ப்பா, முகமந்தர்வேதி: சதுஷ்கபாலம் சிர: ஷோடச பார்ச்வ தந்த படலானி, ஸப்தோத்தரம் மர்மசதம், ஸாசீதிகம், ஸந்திசதம், ஸநவகம் ஸ்நாயுசதம், ஸப்த ஸிரா சதானி, பஞ்ச மஜ்ஜாசதானி, அஸ்த்தீனி ச ஹ வை த்ரீணி சதானி ஷஷ்டீ: ஸார்த்த சதஸ்ரோ ரோமாணி கோட்யோ ஹ்ருதயம் பலான் யஷ்டௌ, த்வாதசபலா ஜிஹ்வா, பித்தப்ரஸ்த்தம் கபஸ்யாடகம் சுக்ர குடவம், மேத: ப்ரஸ்த்தௌ, த்வாவநியதம் மூத்ர புரீஷ- மாஹார பரிமாணத் ॥ பைப்பலாதம் மோக்ஷ சாஸ்த்ரம் பைப்பலாதம் மோக்ஷ சாஸ்த்ரமிதி ॥ 5 ॥

திகள் நுற்றெண்பத்து ஸ்நாயு என்ற நரம்புகள் நூற்றொன்பது. மற்ற நரம்புகள் எழுநூற்று. ஊன் ஐந்நூறு. முன்னூற்றறுபது எலும்புகள். நாலரைக்கோடி உரோமங்கள். எட்டுபலம் எடையுள்ள இருதயம். பன்னிரண்டுபலம் நாக்கு. ஒரு சேர் பித்தம். இரண்டு சேர் கபம், கால்சேர் சுக்ரம், இரண்டு சேர் கொழுப்பு. மலமூத்திரம் ஆஹார அளவுப்படி, நியமமில்லாதது. (இப்படி சரீர தத்துவத்தை ஆராய்ந்தறிந்து அதினின்று விடுதலே அடைய வேண்டும் என்ற) மோக்ஷசாஸ்திரம் இங்ஙனம் பிப்பலாத மஹரிஷியால் உபதேசிக்கப்பட்டதாகும், பிப்பலாத மஹரிஷியால் உபதேசிக்கப்பட்டதாகும்.

இங்ஙனம் கர்ப்போபநிஷத்து முற்றும்

# ॥ नारायणोपनिषत् ॥ १८ ॥

"ओं सहनाववतु" इति शान्तिः ॥

माया तत्कार्यमखिलं यद्बोधाद्यात्यपह्नवम् ।
त्रिपान्नारायणाख्यं तत् कलये स्वात्म-मात्रतः ॥

ओं अथ पुरुषो ह वै नारायणोऽकामयत । प्रजाः सृजेयेति । नारायणात् प्राणो जायते । मनः सर्वेन्द्रियाणि च खं वायुर्ज्योतिरापः पृथिवी विश्वस्य धारिणी । नारायणाद्ब्रह्मा जायते । नारायणाद्रुद्रो जायते । नारायणादिन्द्रो जायते । नारायणात् प्रजापतिः प्रजायते । नारायणाद् द्वादशादित्या रुद्रा वसवः सर्वाणि छन्दाँसि नारायणादेव समुत्पद्यन्ते । नारायणात् प्रवर्तन्ते । नारायणे प्रलीयन्ते । एतत् ऋग्वेदशिरोऽधीते ॥

---

## 18. நாராயணோபநிஷத்து

'ஓம் ஸஹநாவது' என்று சாந்திபாடம்

1. மாயையும் அதனால் விளைந்த அனைத்தும் எதை அறிந்த மாத்திரத்தில் முற்றும் மறைந்து போகுமோ அந்த 'த்ரிபாத்- நாராயண' தத்துவத்தை உள்ள துள்ளபடி கூறுகிறேன்.

ஓம் ஸஹ நாவவது இதி சாந்தி:।
மாயா தத் கார்யமகிலம் யத் போதாத் யாத்ய பஹ்னவம்।த்ரிபாந் நாராயணாக்க்யம் தத் கலயே ஸ்வாத்ம மாத்ரத:।

ஓம் அத புருஷோ ஹ வை நாராயணோ S கர்மயத ।
ப்ரஜா: ஸ்ருஜேயேதி। நாராயணாத்
ப்ராணோ ஜாயதே।மன: ஸர்வேந்த்ரியாணி ச
க்கம் வாயுர் ஜ்யோதிராப: ப்ருதிவீ விச்வஸ்ய-
தாரிணீ। நாராயணாத் ப்ரஹ்மா ஜாயதே।
நாராயணாத் ருத்ரோ ஜாயதே। நாராயணா
திந்த்ரோ ஜாயதே। நாராயணாத் ப்ரஜாபதி:
ப்ரஜாயதே।நாராயணாத் த்வாதசாதித்யா ருத்ரா
வஸவ: ஸர்வாணி ச்சந்தாம்ஸி நர்ராயணாதேவ
ஸமுத்பத்யந்தே। நாராயணாத் ப்ரவர்த்தந்தே।
நாராயணே ப்ரலீயந்தே। ஏதத் ருக்வேத
சிரோSதீதே ॥ 1 ॥

---

ஓம் பரம புருஷரான நாராயணர் பிரஜைகளை சிருஷ்டிக்க வேண்டும் என்று ஸங்கல்பித்தார். (அந்த ஸங்கல்பத்தால்) நாராயணரிடமிருந்து பிராணன் உண்டாகிறது. மனதும் எல்லா இந்திரியங்களும் உண்டாகின்றன. ஆகாயமும் வாயுவும் ஒளியும் நீரும் உலகிலுள்ள உயிர்களைத்தாங்கும் பூமியும் உண்டாகின்றன. நாராயணரிடமிருந்து பிரம்மா தோன்றுகிருர். நாராயணரிடமிருந்து இந்திரன் தோன்றுகிருர். நாராயணரிடமிருந்து (மக்களை ஆக்கி ஆளும்) பிரஜாபதி தோன்றுகிருர். நாராயணரிடமிருந்து பன்னிரண்டு ஆதித்தியர்களும் (பதினொரு) ருத்திரர்களும் (எட்டு) வசுக்களும்; எல்லா வேதங்களும் நாராணரிடமிருந்தே தோன்றுகின்றனர். நாராயணரிடமிருந்தே இயங்கு

अथ नित्यो नारायणः । ब्रह्मा नारायणः । शिवश्च नारायणः । शक्रश्च नारायणः । कालश्च नारायणः । दिशश्च नारायणः । विदिशश्च नारायणः । ऊर्ध्वंच नारायणः । अधश्च नारायणः । अन्तर्बहिश्च नारायणः । नारायण एवेदं सर्वं यद्भूतं यच्च भव्यम् । निष्कलंको निरंजनो निर्विकल्पो निराख्यातः शुद्धो देव एको नारायणो न द्वितीयोऽस्ति कश्चित् । य एवं वेद स विष्णुरेव भवति स विष्णुरेव भवति ।। एतद् यजुर्वेदशिरोऽधीते ।। २ ।।

ओमित्यग्रे व्याहरेत् नम इति पश्चात् । नारायणायेत्युपरिष्टात् । ओमित्येकाक्षरम् । नम इति द्वे अक्षरे । नारायणायेति पंचाक्षरणि । एतद्वै नारायणस्याष्टाक्षरं पदम् । यो ह वै नारायणस्याष्टाक்ஷரं पदमध्येति । अनपब्रुवः सर्वमायुरेति । विन्दते

---

கின்றனர். நாராயணரிடமே ஒடுங்குகின்றனர் — என்றிவ்வாறு ருக்வேத உபநிஷதத்தில் படிக்கப்படு கிறது.

2. நாராயணன் என்று முள்ளவர். பிரம்மா, சிவன், இந்திரன் எல்லோரும் நாராயணனே. காலமும் திசை களும், திக்குகளும் நாராயணனே. மேலும் கீழும் உள்ளும் புறமும் நாராயணனே. உண்டாயதும் உண் டாகப்போவதும் ஆகிய இது எல்லாம் நாராயணனே. களங்க மற்றதும் மாசற்றதும் விகல்ப மற்றதும் சொல்லொணுததும் பரிசுத்தமுமாகிய ஒரே தெய்வம்

அத நித்யோ நாராயண: । ப்ரஹ்மா நாராயண: । சிவச்ச நாராயண: । சக்ரச்ச நாராயண: । காலச்ச நாராயண: । திசச்ச நாராயண: । விதிசச்ச் நாராயண: । ஊர்த்த்வஞ்ச நாராயண: । அதச்ச நாராயண: । அந்தர்- பஹிச்ச நாராயண: । நாராயண ஏவேதம் ஸர்வம் யத் பூதம் யச்ச பவ்யம் । நிஷ்கலங்கோ நிரஞ்ஜனோ நிர் விகல்போ நிராக்க்யாத: சுத்தோ தேவ ஏகோ நாராயணோ ந த்விதீயோ ऽஸ்தி கச்சித் । ய ஏவம் வேத । ஸ விஷ்ணுரேவ பவதி ஸ விஷ்ணுரேவ பவதி । ஏதத்யஜுர் வேதசிரோ (அ) தீதே ॥ 2 ॥

ஓமித்யக்ரே வ்யாஹரேத் । நம இதி பச்சாத் । நாராயணாயேத்யுபரிஷ்டாத் । ஓமித்யே காக்ஷரம் । நம இதி த்வே அக்ஷரே । நாராயணாயேதி பஞ்சாக்ஷராணி । ஏதத்வை நாராயணஸ்யாஷ்டாக்ஷரம் பதம் । யோஹ வை நாராயணஸ்யாஷ்டாக்ஷரம் பதமத்த்யேதி । அநபப்ருவ: ஸர்வமாயுரேதி । விந்ததே ப்ராஜாபத்யம் ராயஸ்போஷம் கௌபத்யம் ததோऽம்ருதத்வ- மச்னுதே ததோऽம்ருதத்வமச்னு த இதி । ஏதத் ஸாமவேத [illegible]ராऽதீதே ॥ 3 ॥

---

நாராயணனே. அவனல்லாது இரண்டாவது ஒன்று மில்லை. எவன் இங்ஙனம் அறிந்தவனோ அவன் விஷ்ணுவாகவே ஆகிறான், விஷ்ணுவாகவே ஆகிறான். யஜுர் வேத உபநிஷதம் இங்ஙனம் கூறுகிறது.

3. முதலில் 'ஓம்' என்று சொல்லவும்; பிறகு 'நம:' என்றும் அதன்மேல் 'நாராயணாய' என்றும். 'ஓம்' என்பது ஒரெழுத்து; 'நம:' இரண்டெழுத்து; 'நாரா யணாய' ஐந்தெழுத்து; இங்ஙனம் நாராயண அஷ்டா க்ஷரம் (எட்டெழுத்து மந்திரம்). எவன் நாராயண

प्राजापत्यं रायस्पोषं गौपत्यं ततोऽमृतत्वमश्नुते ततोऽमृतत्वमश्नुत इति । एतत् सामवेदशिरोऽधीते ॥ ३ ॥

प्रत्यगानन्दं ब्रह्मपुरुषं प्रणवस्वरूपम् । अकार उकारो मकार इति । ता अनेकधा समभवत् तदोमिति यमुक्त्वा मुच्यते योगी जन्मसंसारबन्धनात् । ओं नमो नारायणायेति मन्त्रोपासको वैकुण्ठभुवनं गमिष्यति । तदिदं पुण्डरीकं विज्ञानघनम् तस्मात्तडिदाभमात्रम् । ब्रह्मण्यो देवकीपुत्रो ब्रह्मण्यो मधुसूदनः । ब्रह्मण्यः पुण्डरीकाक्षो ब्रह्मण्यो विष्णुरुच्यत इति । सर्व भूतस्थमेकं वै नारायणं कारणपुरुषमकारणं परब्रह्मोम् एतदथर्वशिरोऽधीते ॥ ४ ॥

प्रातरधीयानो रात्रिकृतपापं नाशयति । सायमधीयानो दिवसकृतपापं नाशयति । माध्यंदिनमादित्याभिमुखोऽधीयानः पंचमहापातकोपपातकात् प्रमुच्यते । सर्व

---

அஷ்டாக்ஷரத்தை ஓதுகிறுனே அவன் அபகீர்த்தி இல்லாமல் பூர்ணமான ஆயுளை அடைவான்; பிரஜைகளின் ஆட்சி, செல்வத்தின் நிறைவு, பசுக்கள் முதலிய ஸம்பத்து உடையவனுகிப் பிறகு மோக்ஷத்தை அடைகிறுன், மோக்ஷத்தை அடைகிறுன். இங்ஙனம் ஸாமவேத உபநிஷதம் கூறுகிறது.

4. உள்ளே விளங்கும் ஆனந்த மயமான பிரம்ம புருஷன் பிரணவ (ஓங்கார) ஸ்வரூபி. (பிரணவத்தின் மாத்திரைகள்) அகாரம், உகாரம், மகாரம் என்பவை.

ப்ரத்யகானந்தம் பரஹ்ம 'புருஷம் ப்ரணவ ஸ்வரூபம் । அகார உகாரோ மகார இதி । தா அநேகதா ஸமபவத் ததோமிதி யமுக்த்வா முச்யதே யோகீ ஜன்ம ஸம்ஸாரபந்தனாத் । ஓம் நமோ நாராயணாயேதி மந்த்ரோபாஸகோ வைகுண்டபுவனம் கமிஷ்யதி । ததிதம் புண்டரீகம் விஜ்ஞானகனம் தஸ்மாத் தடிதாப மாத்ரம் । ப்ரஹ்மண்யோ தேவகீ புத்ரோ ப்ரஹ்மண்யோ மதுஸூதன: । ப்ரஹ்மண்ய: புண்டரீகாக்ஷோ ப்ரஹ்மண்யோ விஷ்ணுருச்யத இதி । ஸர்வபூதஸ்த்த மேகம் வை நாராயணம் காரண- புருஷமகாரணம் பரப்ரஹ்ம ஓம் । ஏத- ததர்வசிரோऽ தீதே ॥ 4 ॥

ப்ராதரதீயானோ ராத்ரிக்ருத- பாபம் நாசயதி । ஸாயமதீயானோ திவஸக்ருத- பாபம் நாசயதி । மாத்த்யந்தினமாதித்யாபிமுகோ (அ)தீயான: பஞ்சமஹாபாதகோபபாதகாத் ப்ரமுச்யதே । ஸர்வவேதபாராயண- புண்யம் லபதே । நாராயண ஸாயுஜ்யமவாப்னோதி ।

---

அதுவே பலவாக வளர்ந்தது. அந்த ஓங்காரத்தை எந்த யோகி ஜபிக்கிறானோ அவன் பிறவித்தளைகளி லின்று விடுபடுகிறான். 'ஓம் நமோ நாராயணாய' எனும் மந்திரத்தை உபாஸிப்பவன் வைகுண்ட லோகத்தை அடைகிறான். அந்த வைகுண்டலோகம் ஞானமயமான இருதய கமலமேயாகும். அதினின்று மின்னல் கொடி போல் ஒரு ஒளி கிளம்புகிறது. தேவகீ புத்ரன், மதுஸூதனன் பிரம்மஸ்வரூபி, கமலக்கண்ணன் பிரம மஸ்வரூபி. விஷ்ணு பிரம்மஸ்வரூபி. எல்லா உயிர்களிலும் உறையும் காரண புருஷன் நாராயணனே. அவனே காரணமற்ற ஓம் என்ற பரப் பிரம்மம். இங்ஙனம் அதர்வ உபநிஷதம் கூறுகிறது.

वेदपारायण पुण्यं लभते । नारायणसायुज्यमवाप्नोति । श्रीमन्नारायण- सायुज्यमवाप्नोति य एवं वेद ॥ ५ ॥

ஸ்ரீமந்நாராயண ஸாயுஜ்ய- மவாப்னோதி ய ஏவம் வேத ॥ 5 ॥

5. காலையில் இதை ஓதுபவன் இரவில் செய்த பாவத்தை நாசம் செய்கிறான். மாலையில் ஓதுபவன் பகலில் செய்த பாவத்தை நாசம் செய்கிறான். உச்சிப்போதில் சூரியனை நோக்கியவனாய் ஓதுபவன் ஐந்துவிதமான் மகாபாதகங்கள் உபபாதங்களினின்று விடுபடுகிறான். எல்லா வேதங்களையும் ஓதிய புண்ணியத்தை அடைகிறான். நாராயணனுடன் ஒன்றிய முக்தியை அடைகிறான், இங்ஙனம் அறிந்தவன்.

இங்ஙனம் நாராயணோபநிஷத்து. முற்றும்

---

